# ஆனந்த நாவல்

## பாலகுமாரன்

விலை
ரூ.12/-




# வில்வ மரம்

## காற்றுக்கென்ன வேலி





குபேரலிங்கம்

யோகிராம் சுரத்குமார்

எழுத்துச்சித்தர் பாலகுமாரன் ஆசிபெற்ற

# தீபம் ஜெம்ஸ்

நுட்பமானதும், சூட்சுமமானதுமான ரத்தினங்களை வாழ்க்கையில் ஒவ்வொரு மனிதரும் கட்டாயமாக ஒருமுறை அணிவது கடமை. எனவே ஒவ்வொருவரும் தங்கள் ஜாதகத்திற்கு ஏற்ற ரத்தினங்களை நமது நிறுவனத்தில் வாங்கி அணியுங்கள்.

வெள்ளியால் செய்யப்பட்ட மாணிக்கம், மரகதப்பச்சை, கோமேதகம், முத்து, பவளம், புஷ்பராகம், நீலம், வைடூரியம் ஆகிய ரத்தினங்களால் செய்த மோதிரங்கள் விலை ரூ.500. மேலும் வெள்ளியில் கட்டிய ஸ[illegible] மாலை, நவரத்தின மாலை, ஜேட் பிள்ளைய[illegible] பவளப் பிள்ளையார், ருத்ராட்சம், மரகத மாலை, ரூபி மாலை, பவள மாலை, வாஸ்து பிரமிடு, ஸ்படிக லிங்கம், ஸ்படிக பிள்ளையார், ஸ்படிக மகாமேரு ஆகிய எல்லா விதமான ஆன்மிக பொருட்களும் கிடைக்கும்.

வெள்ளியால் கட்டிய 72 மணிகளைக் கொண்ட ஸ்படிக மாலை விலை ரூ.450. இதை தபாலிலோ அல்லது நேரிலோ வாங்குபவர் களுக்கு ஒரு தங்க மூக்குத்தி அன்பளிப்பு. இந்த சலுகை, விளம்பரம் வந்த 90 நாட்களுக்கு மட்டுமே. மோதிரம் வேண்டுவோர் கம்பியில் அளவு எடுத்து தபாலில் அனுப்பவும்.

# ஆசிரியர் பக்கம்

தோழமைக்கு,

வணக்கம்!

பகவான் சனத்குமாரிடம் நாரதர் சென்றார். தன்னை சிஷ்யனாக ஏற்று கொள்ளும்படிக் கேட்டார்.

"நீ இதுவரை கற்றவற்றை கூறு, பிறகு நீ கற்க வேண்டியவற்றை நான் தீர்மானிக்கிறேன்" என்றார்.

"நான்கு வேதங்கள், வேதத்தின் ஆறு அங்கங்கள் பதினெண் புராணங்கள்" என்று நாரதர் தான் கற்ற அனைத்தை பற்றியும் ஒரு நீண்ட பட்டியல் கொடுத்தார்.

இவைகளை அமைதியாக கேட்ட குரு, "வேறு என்ன கற்று வேண்டும். எல்லாம்தான் கற்றுத் தெளிந்திருக்கிறீர்களே."

"நான் எல்லாமும் கற்றுள்ளேன். ஆனாலும் என் மனதில் அமைதியில்லை. ஏதோ ஒரு முழுமையடையாத உணர்வு ஒன்று என்னுள்ளே இருந்து கொண்டேயிருக்கிறது" என்றார்.

குரு சிரித்தார், "நாரதா நீ ஏராளமான நூல்களை கற்றுள்ளாய். ஆனால் நீ கற்றவை அனைத்தும் வெறும் படிப்பறிவாகவே நின்று விட்டது. எல்லாம் உனக்குத் தெரிந்ததால் நீ சொல்லில் வல்லவனாகி விட்டாய். ஆனால் உன்னை நீ அறியவில்லை. தான் யார் என்று தன்னை முழுமையாக அறிந்தவனே இங்கு எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபடுகிறான். முழுமையடைகிறான்" என்றார்.

நாரதர் மிகுந்த அடக்கத்தோடு, "குருவே

போற்றி, எனக்கு அந்த ஞானத்தை உபதேசிக்க வேண்டும்" என்று வாய் பொத்தி நின்றார். என்று போகிறது கதை.

நமக்கு எல்லாம் தெரியும் என்கிற எண்ணம் மிக மிக விஷமானது. எல்லாம் அறிந்த பின்னும் மனம் பற்றி அறியாதவர் இங்கு நிறைய உண்டு.

தன்னை அறிய பிறரைப் படியுங்கள். கர்வ மின்றி எளிமையாய் பழகுங்கள். குருவுக்காக ஏங்குங்கள். இந்த ஏக்கமே நம்மை நல்ல குரு விடம் கொண்டு சேர்க்கும் என்பதை மறந்து விடாதீர்கள்.

எழுத்துச் சித்தர் பாலகுமாரன் அவர் களின் செல்லமகள் சௌபாக்கியவதி ஸ்ரீகௌரிக்கும் - சிரஞ்சீவி கணேஷ்க்கும் சென்ற மாதம் சென்னை நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டலில் உள்ள திருமண மண்டபத்தில் இனிதே திருமணம் நடைபெற்றது.

புதுமணத் தம்பதிகள் எல்லாவிதமான செல்வங்களும் பெற்று, சீரும், சிறப்புமாக, சிரஞ்சீவியாக வாழ தோழமைகள் அனை வரும் பிரார்த்தனை செய்யுமாறு பல்சுவை நாவல், லேடீஸ் நாவல், ஆனந்த நாவல், க்ரைம் ஸ்டோரி சார்பாக கேட்டுக் கொள் கிறேன்.

மற்றபடி,

அனைவருக்கும் பண்டிகை கால, விடுமுறை கால வாழ்த்துக்கள்.

உங்களின் கடிதங்களுக்காக காத்திருக்கி றேன்.

மீண்டும் சந்திப்போம்.

தோழமையுடன்,

**பொன்.சந்திரசேகர்**



# பாலகுமாரன் பேசுகிறேன்

இனிய ஸ்நேகிதத்திற்கு,

வணக்கம். வாழிய நலம்.

எல்லாம் வல்ல இறையருளாலும், என் சத்குருநாதர் திருவண்ணாமலை மகான் கடவுளின் குழந்தை, அடியார்க்கு நல்லான் **யோகிராம்சுரத்குமார் அருளாலும் என் மகள் சௌபாக்கியவதி ஸ்ரீகௌரியின் திருமணம் சிரஞ்சீவி கணேஷுடன் மிகச் சிறப்பாக 24.3.2002 அன்று சென்னையில் நடைபெற்றது.** அப்படியா... என்று உங்களில் பலர் வியக்கலாம். ஏன் பல்சுவை நாவலில் முன்கூட்டியே சொல்லவில்லை என்று மெல்லியதாய் கோபித்துக் கொள்ளலாம். எல்லோருக்கும் பத்திரிகை அனுப்புவது என்பது இயலாத காரியம். அத்தனை பேருக்கும் அனுப்ப





வேண்டும் என்கிற ஆசை எனக்கு இருந்தாலும், நீங்கள் ஒவ்வொருவரும் என் வீட்டிற்கு விஜயம் செய்து என் மகளை வாழ்த்த வேண்டும் என்று விரும்பினாலும் நேரம் கருதியும் உங்களை தக்கபடி உபசரிக்க முடியாதே என்ற கவலை கருதியும் இந்த செய்தியை உடனடியாக பகிர்ந்து கொள்ள முடியவில்லை. தாமதமாக இந்தச் செய்தியை சொல்வதற்காக சிரம்தாழ்ந்த என் மன்னிப்பை வாசகர்களாகிய உங்களிடமும், ஏஜெண்ட் நண்பர்களிடமும் விற்பனை செய்யும் கடைக்காரர்களிடமும் கேட்டுக் கொள்கிறேன். என் தவறை மனதில் கொள்ளாது ஆனந்த மயமான உள்ளத்தோடு எங்கள் செல்ல மகள் சௌபாக்கியவதி ஸ்ரீகௌரியையும், சிரஞ்சீவி கணேஷையும் ஆசீர்வதிக்குமாறு தாழ்மை யோடு கேட்டுக் கொள்கிறேன்.

நான் மிகச் சாதாரணன். நல்ல படிப்போ, வசதியான குடும்பமோ எனக்கு ஆரம்ப நாட்களில் இல்லை. ஆதரவான மனிதர்களும் குறைவு. என் தாய் ப.சு.சுலோசனா மட்டுமே என்னை பல சங்கடங்களிலிருந்து விடுவித்து உற்சாகப்படுத்தி இன்று இல்லையெனினும் என்றேனும் ஒருநாள் நீ மிகுந்த உயர்வான இடத்திற்கு வரப்போகிறாய் என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். அந்தத் தாயின் கருணை யால், ஆசியால் இந்தத் திருமணம் நிச்சயமாகி இனிதே நடந்து முடிந்தது.

என் தாயார் தமிழ்ப் பண்டிதை ப.சு.சுலோசனா அவர்கள் இறைவனடி சேர்ந்து சரியாக நாற்பத்து ஆறாவது நாளில் இந்தத் திருமணம் நிச்சயமாயிற்று. என் தாயார் சூட்சும ரூபத்தில் நின்று இந்த திருமணத்தை ஏற்பாடு செய்து நடத்திக் கொடுத்தார்கள் என்று நானும் என் குடும்பத்தினரும் மனப்பூர்வமாக நம்புகின்றோம். அவளின் ஆசியும், அவளுடைய பிரார்த்தனை களும்தான் எங்கள் வீட்டிற்கு மிகச் சிறந்த ஒரு

இளைஞனை மாப்பிள்ளையாக கொண்டு வந்து கொடுத்திருக்கிறது.

எனது மாப்பிள்ளை சிரஞ்சீவி கணேஷின் தகப்பனார் ராமகிருஷ்ணஐயர், தாயார் மங்களம் அவர்கள் பூர்வீகமாய் வாழ்ந்து வந்தது திருச்சிக்கு அருகேயுள்ள அலகரை என்கிற கிராமம். அந்தக் கிராமத்திலிருந்து திருச்சிக்கு குடிபெயர்ந்து பிறகு வேலையின் நிமித்தம் பம்பாய்க்கு போய் அங்கேயே வீடு வாங்கிக் கொண்டு பம்பாய் வாசிகளாக மாறிவிட்டார்கள். திருச்சியிலும், பம்பாயிலும் படிப்பை முடித்த சிரஞ்சீவி கணேஷ் தற்போது துபாயில் அல்சுபெய்ர் (ALZUBAIR) என்கிற கம்பெனியில் விற்பனை அதிகாரியாக பணியாற்றிக் கொண்டிருக்கிறார். இரண்டு இளைய சகோதரர்களும், இரண்டு திருமணமான சகோதரிகளும் உள்ள நிறைவான குடும்பம் அது.

சௌபாக்கியவதி ஸ்ரீகௌரி துபாய்க்கு தனிக்குடித்தனம் செய்ய சென்றிருக்கிறாள். திருமணமானது மிக சந்தோஷமான விஷயம் என்றாலும் இத்தனை காலம் வீட்டிற்குள் ஒரு நந்தவனம்போல் சுற்றிக் கொண்டிருந்த அந்தப் பெண் பிள்ளை வேறொரு இடத்திற்கு குடிபெயரப் போகிறாள் என்று உணரும்போது உள்ளே நெகிழ்ந்து போகிறது. இந்த மெல்லிய துக்கத்தை பெண்ணைப் பெற்ற அத்தனை பேரும் அனுபவித்துதான் ஆக வேண்டும். இது ஒரு வேதனையான சுகம். பெண் மக்களைப் பெற்ற என் வாசகர்கள் அனைவரும் தங்கள் பெண் குழந்தைகளை நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுத்து நான் இப்பொழுது அனுபவிக்கின்ற அந்த சுகமான, மெல்லிய வேதனையை நீங்களும் அனுபவித்து வாழ்க்கையை ரசிக்க வேண்டுமென்று இந்த நேரத்தில் பிரார்த்தனை செய்கின்றேன்.

மறுபடியும் நேரில் வந்து அழைக்காததற்கு

என் மன்னிப்பை கோருகிறேன். முன்கூட்டியே திருமணம் பற்றி தகவல் தெரிவிக்காமல் இருந்த திற்கான வருத்தத்தை தெரிவித்துக் கொள் கிறேன்.

நாம் செய்கிற ஒவ்வொரு நல்ல விஷயங் களும் பன்மடங்குப் பெருகி நமக்குத் திரும்பி வருகின்றது என்பதை இந்தத் திருமணத்தின் மூலம் அறிந்தேன். நான் எழுதுகின்ற கதை களை படித்துவிட்டு உங்களால் என் வாழ்க்கைப் பாதை மாறியது. உங்களால் நான் ஜெயித்தேன். என்னுடைய தோல்விகளை துடைத்து எறிந்து விட்டு மறுபடியும் வெறிகொண்டு புறப்பட்டு நல்ல நிலைக்கு உயர்ந்தேன் என்று பல நண்பர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவ்வாறு சொன்ன பல நண்பர்களில் சிலர் இந்தத் திருமணத்தில் பங்கெடுத்துக் கொண்டு தங்கள் உழைப்பை கொட்டி இந்தத் திருமணம் மிகச் சிறப்பாக நடக்க உதவி செய்தார்கள்.

நான் ஒருத்தனாக நின்று இந்தத் திரு மணத்தை நடத்தியிருக்கவே முடியாது. எல்லா வகையிலும் அவர்கள் இந்தத் திருமணம் நடத்த உதவியாக இருந்தார்கள். வெகு குறிப்பாக தாவன்கரேவைச் சேர்ந்த திரு.செல்வராஜ், திரு.சிவராஜ், திருமதி அம்பிகா, திருமதி விமலா, திரு.ஜெகன், திருமதி ஜோதி, கரூரைச் சேர்ந்த திரு.சேதுக்குமார், திருமதி மஞ்சு, திரு.குரு, சென்னையிலுள்ள திரு.பாபு, மோகனூர் பார்த்தசாரதி அவர்கள், திருச்சியைச் சேர்ந்த திரு.எல்.கணேசன் என்று பல நண்பர் கள் இந்தத் திருமணத்திற்கு இரவு பகலாக நேரத்திற்கு உணவின்றி உற்சாகமாய் ஈடுபட் டார்கள். நான் வெறுமே அதட்டி அவர்களை வேலை வாங்கிக் கொண்டிருந்தேன். இவர்கள் எவரும் சாதாரணமான மனிதர்கள் அல்ல. வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்கள். நல்ல

வசதிக்கு கடுமையாக உழைத்து வந்தவர்கள். ஆனால், ஒரு தொண்டர் போல எந்தவித பந்தாவும் இல்லாமல் முழு மூச்சாய் திருமண வேலைகளில் ஈடுபட்டார்கள்.

கோயம்புத்தூரைச் சேர்ந்த திரு.ரவிச்சந்திரன் அவர்கள் திருமணம் என்று சொன்னவுடனேயே எல்லாவிதமான உதவிக்கும் நான் தயார் என்று என் வீட்டிற்கு வந்து இறங்கி அந்தத் திருமணம் எப்படி நடைபெறவேண்டுமென்று வகுத்துக் கொடுத்து அதற்கான வழிமுறைகளையும் செய்து காட்டினார். பல பொருட்கள் அவருடைய வழிகாட்டலில்தான் வாங்கப்பட்டன. இரண்டு சகோதரிகளுக்கு திருமணம் செய்து முடித்த அந்த பெருந்தகையாளரின் அன்புதான் எங்களுக்கு உற்சாகம் கொடுத்தது.

அம்பிகா செல்வராஜ் அவர்கள் துணி வியாபாரம் செய்யும் குடும்பத்தில் பிறந்தவர். என்னுடைய வாசகி. அவர் காட்டிய உற்சாகம் அவர் செய்த உதவிகள் எழுத்தில் அடங்காதது. என் ஈர நெஞ்சில் என்றும் நிலைத்து நிற்கும்.

மிகப் பெரிய கடமை ஒன்றை மிகச் சரியாய் செய்து முடித்த ஒரு நிம்மதியில் மனம் அலண்டு போய் அமைதியாக இருக்கிறது. நாம் செய்த உதவிகள் பல்வேறு விதமாய் வெகு நிச்சயமாய் நமக்கு திருப்பி வருகின்றன என்பதை இந்த திருமணத்தில் நான் தெரிந்து கொண்டேன். எல்லோருக்கும் எல்லா நேரத்திலும் எல்லாவிதமாகவும் உதவிகள் செய்ய நான் என்னை முன்னைவிட அதிக முனைப்போடு தயார்படுத்திக் கொண்டேன். என் எழுத்துக்கள் இன்னும் வீர்யம் கொண்டு உங்களை சுற்றி வரும். உங்களை உற்சாகப்படுத்தும். உங்களை உறுதிப்படுத்தும். உங்கள் உயர்வுக்கு வழிகாட்டும். நான் நன்றாக எழுதவே என் நண்பர்கள் எனக்கு உதவி செய்திருக்கிறார்கள். நான்

நலமாக இருந்து விரைவாக பலதும் எழுதவே என் சத்குருநாதர் யோகிராம்சுரத்குமார் எனக்கு இந்த அற்புதமான குடும்பத்தை சுட்டிக்காட்டி சம்மந்தம் வைத்திருக்கிறார். என் எழுத்துப்பணி சிறப்பாக தொடரும். முழு முனைப்பாக வளரும் என்று தெரிவித்துக் கொண்டு உங்கள் அனைவரையும் மனமார நமஸ்கரித்து, என் செல்வி என் குழந்தை. சௌபாக்கியவதி ஸ்ரீ கௌரியையும், சிரஞ்சீவி கணேஷ் அவர்களை யும் வாழ்த்துமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

வேறென்ன, வெய்யிற்காலம் துவங்கி விட்டது. மறுபடியும் பூமி மெல்லியதாய் வெடித்து மழைக்காக வாய் பிளந்து காத்திருந்து, அந்த பிளவில் வரும் மாதங்களில் கடும் மழை பெய்து பூமி முழுவதும் வயிறு குளிர நிறைந்து அற்புதமான பயிர்கள் விளைந்து வரவேண்டு மென்று என் சத்குருநாதர் யோகிராம்சுரத்குமார் அவர்களை வேண்டிக் கொள்கிறேன்.

மழை வேண்டும் என்று நாம் விரும்புவது போல வெய்யில் வேண்டுமென்று விரும்புவது தான் நியாயம். நல்ல வெய்யில்தான் நல்ல மழையை கொண்டு வரும். நல்ல வெய்யில் தான் நிலத்திற்கு உற்சாகம்.. இந்த முறை பூமி நன்கு காய்ந்து நல்ல மழைக்கு தன்னை தயார் படுத்திக் கொள்ளட்டும். நல்ல மழை இந்த முறை உண்டு என்றுவிவரம் தெரிந்தவர்கள் சொல்கிறார்கள். அதற்காக இப்போதே நாம் பிரார்த்தனை செய்வோம்.

உங்கள் அனைவருக்கும் எனது பண்டிகை தின வாழ்த்துக்கள்.

மறுபடி சந்திப்போம்.

என்றென்றும் அன்புடன்,

**பாலகுமாரன்**

# ஸ்நேகிதம்



இங்கு
இனிய
ஸ்நேகித
முள்ளவர்கள்
அனைவரும் கடிதம் மூலம்
கை குலுக்கிக் கொள்ளலாம்.

கே.எம்.குமார்
அபூர்வா பார்க்,
பெங்களூர் பைபாஸ் சாலை,
கந்தம்பட்டி,
சேலம்-5.

வி.தனபால்
115, சாலைத்தெரு,
காஞ்சிபுரம் - 631 502.

ஆர்.சண்முகப்ரியா
த/பெ ஜெ.யூ.ராமலிங்கம்,
டாக்குமெண்ட் ரைட்டர்,
ஜலகண்டபுரம்,
சேலம்-636 501.

ஏ.சுப்ரமணியம்
பிரிமியர் இண்டர்
நேஷனல்,
தபால்பெட்டி எண் -35,
பொள்ளாச்சி - 642 001.

வி.காளிதாசன்
பங்கேத்தான் குடி,
வேட்டனூர்,
அறந்தாங்கி - 614 630.

பி.எம்.சண்முகம்,
363, சுப்ரமணியசுவாமி
கோவில்தெரு,
தென்காசி- 627 811.

எஸ்.விஜய்கார்த்திக்
15, எடைக்கல் அஜீஸ்நகர்,
உளுந்தூர்பேட்டை
- 606 107

தி.மா.தமிழழகன்
4/90சி, சின்னக்
கம்மாளத்தெரு,
திருச்சி - 620 008.





# வாசகர்

அமரர் 'கல்கி'யின் பொன்னியின் செல்வன் சரித்திர நாவலில் சந்தித்த சோழ மன்னர் பரம்பரையை எழுத்துச் சித்தர் 'ஒரு காதல் நிவந்தம்' என்னும் காவிய ஓவியத்தில் உயிர்பித்து எங்கள் உள்ளங்களைக் கொள்ளை கொண்டு விட்டார். நாவல் என்றாலும் காதல் காவியமாய் ருசித்தது. இராஜேந்திர சோழ மன்னன், அனுக்கி பரவை நாச்சியார் இருவரின் தெய்வீக உறவு, சோழர் குலம் காக்கும் குந்தவை பிராட்டியாரிடம் வயது முதிர்ந்தாலும் பொன்னியின் செல்வன் தமக்கை என்று நினைவு கொள்ள வைக்கும் அதே கம்பீரமும், ராஜரீகமும் பாலாவின் எழுத்தில் ஆயிரம் ஆண்டுகள் சென்ற பின்பும் கவி பாடியுள்ளது. இந்த நாவலோடு இணைந்து வழங்கியிருந்த 'கெட்டாலும் ஆண்மக்கள்' சிறுகதை எந்த சராசரி மனித முகத்தின் மனசாட்சியையும் சுட்டுப் பொசுக்கி விடும். வாழ்வின் வெற்றிக்கு அன்பை ஒரு ஆயுதமாகப் பிரயோகிக்க ஆத்ம யோகி பாலா கற்றுத் தரும் ஓர் அற்புதப் பாடம் இது!

**ஆர்.ஆர்.சாமி,**
*திருவண்ணாமலை.*

தங்களின் 'ஒரு காதல் நிவந்தம்' சோழர் காலத்திலேயே ஓர் அம்மா எவ்

வளவு திறமையாக அரசிய லில் ஈடு பட்டு செயலாற்றியுள் ளார் என்பதை குந்தவை பிராட்டியார் பாத்திரம் மூலம் தெளிவாக விளக்கி யுள்ளீர்கள்! இந்நாவலை வாசிக்கும் போது... ஏனோ 'கல்கி' அவர்களின் பொன் னியின் செல்வன் நாவல் நினை வுக்கு வருகிறது. தங்களின் எழுத்துலக பயணத்தில் இந் நாவலும் ஒரு மைல் கல்லாக திகழும். அருமையான முத்தாய்ப் புடன் முடியும் ஒவ்வொரு அத் தியாயமும், அழகாய் துவங்கு வதில் மற்றொரு அத்தியாயத்தை சாப்பிட்டு விடுகிறது. நன்றிகள் பல...

**ஏ.ஆர்.கலை,**
அரியகோஷ்டி.

பாலாவின் ஒரு காதல் நிவந்தம் படித்தேன். மிகவும் அருமையாக இருந்தது. இந் நாவலின் கதாபாத்திரங்கள் அனைத்தும் என் மனதோடு ஒன்றிவிட்டது. நாவல் படித்து முடித்து வெகு நேரம் வரை அப் படியே உட்கார்ந்து விட்டேன். மற்ற எழுத்தாளர்கள் வியாபார நோக்கத்துடன் எழுதுகிறார்கள். ஆனால் பாலா அதற்கு விதிவிலக் காக இருக் கிறார்கள். பாலாவின் ஒவ்வொரு எழுத்துகளும் பட்டை தீட்டிய வைரம் போன்றவை.

**டி.சீனிவாசன்,**
திருப்பூர்.

# ஸ்கேனிங்



மைப்படுவதும், அரசனின் கம்பீரத்தை பல தாய்மார்களிடம் தொலைப்பதும், போரில் வென்ற வகைகளுக்காய், அரண்மனைப் பெண்டிர் போட்டி போடுவதும், தன் மனைவியரை அதட்டி விட்டு வரும் இராஜேந்திரனை நினைக்கையில் அரசன் பாடு எவ்வளவு கடினம் என்பதை மனம் தெளிவாய் உணர்ந்தது.

பஞ்சவன் மாதேவி மரகதலிங்கம் கேட்க, அது எங்கு கிடைக்கும் அருண்மொழி என்ற கவலை எல்லரவற்றிற்கும் சிகரம். ஆயின் இவர்கள் தன்னை தாலாட்டி, சீராட்டி வளர்த்தவர்கள் என்ற நன்றியுணர்வோடு யோசிக்கையில் ஒரு பெருமிதம் பொங்குகிறது. பெரும்பாலும் அரசர்களின் திருமணம் போர் நடவடிக்கைகளை முன்னிட்டே. சேரன் பெண்ணை திருமணம் செய்தால் சேரர்களோடு இணையலாமே என்பதற்காகவே நடந்த திருமணங்கள்.

இங்கு நம்மையும் ஒப்பு நோக்க வேண்டியிருக்கிறது. ஒரு மனைவியோடு வாழ்ந்து, அவரின் நிறை, குறைகளைப் பார்த்து அனுசரித்து வாழவே, படாதபாடு பட வேண்டியிருக்கிறது. இத்துணை இன்னல்களில் அவர் தனியாய் இருந்ததில் வியப்பேதுமில்லை.

குந்தவை, ஆக்ரோஷமும், தடாலடி வார்த்தைகளுமாய் எல்லாரையும் விளாசிப் பார்க்கும் கம்பீரமான சோழப் பிராட்டி! தன் நியாயமான கருத்தையும், எதிராளி மனம் நோகச் சொல்லுவதில் கை தேர்ந்தவளாய் இருக் கிறார். ஆனாலும் கலகம் பிறந்தால் நியாயம் பிறக் கும் என்பதற்கும் அவரே முன்னுதாரணமாக இருக்கிறார். பெண்கள் சிதைப்படக்கூடாது என்ற அவரின் அக்கறையே கோபமாய் கிளர்ந்தது என்கிறபோது, அவரைப் பற்றிய பிரம்மிப்பே மேலோங்கி நிற்கிறது.

தங்களின் சோழ தேசத்தைப் பற்றிய பல அலசல்களைப் படித்ததினால் சொல்கிறேன்! தங்களுக்கும், சோழ தேசத்துக்கும் நிச்சயம் ஏதோ தொடர்பு இருந்திருக்க வேண்டும். இல்லையேல், இப்படி உணர்ச்சிப் பூர்வமான வார்த்தைகளால் ஒரு வாசகரைக் கட்டிப் போட முடியாது!

**கே.சசிகலா,**
**ஆனங்கூர்.**

நான் இனிப்பகத்தில் தொழில் பழகி, நல்ல முறையில் வேலை செய்து கொண்டு இருக்கிறேன். தாங்கள் எழுதிய நாவல் எனக்கு அறிமுகமானது சக ஊழியர் ஒருவரால்தான். ஏதோ சுமாரான கல்வியறிவை வைத்துக் கொண்டு பாமரனாக வேலை செய்து கொண்டிருந்த இந்த இளைஞன் மனதிலே தன்னம்பிக்கை பயிரை வளர்த்து விட்டது உங்களது நாவல்தான். இயலாமையை நினைத்து எவரிடமும் கோபப்பட தயங்காத என்னிடம் ஒரு திருப்பு முனையாக திகழ்ந்த தாங்களுக்கு பணிவான வணக்கங்கள். தாங்களின் எழுத்து என்னை பரவசப்படுத்தியது. சிந்திக்க செய்தது. இவ்வளவுதான் என்னால் வெளிப்படுத்த முடிகிறது. மனதில் ஒரு வியப்பு என்னவென்றால் எப்படி இவ்வளவு விஷயங்களை எழுதினீர்கள். அப்படியானால் எவ்வளவு அனுபவங்களை கடந்து வந்திருக்க வேண்டும். நாம் வாழும் இந்த நூற்றாண்டில் இவ்வளவு பெரிய மஹான் வாழ்கிறார் என்பதில் மனம் சந்தோஷம் அடைகிறது. இருந்தாலும் அறிமுகம் கொள்ளவில்லையே என்ற கவலை. அறிமுகம் செய்து கொள்ள, தாங்களை குருவாக ஏற்றுக் கொள்ள மனம் ஆதங்கப்படுகிறது. ஏனோ ஒரு இனம்புரியாத பயம் மனதை கவ்விக் கொண்டுள்ளது. கடிதம் எழுதுவதற்கே இந்த பயம். பிறகு என்ன என்று ஆராய்ந்து ஒன்றுமில்லை எனத் தெளிந்து இந்தக் கடிதம் எழுதுகிறேன். தொலைபேசியிலோ அல்லது நேரிலோ சந்திக்க மிக மிக ஆசை இருப்பினும் திடீரென உங்கள் வார்த்தையையோ அல்லது முகத்தையோ நேரில் பார்த்தால் எனது இருதயத் துடிப்பே நின்று விடும். இது பயமா, பதட்டமா தெரியவில்லை. இருந்தாலும் நேரில் பார்க்க ஒரு ஆவல் மனம் நிறைய உள்ளது.

என்றாவது ஒருநாள் சந்தர்ப்பம் சூழ்நிலை வாய்க்காமலா போய் விடும். அன்று நேரில் வந்து ஆசி பெறுகிறேன்.

**வி.மணிக்குமார்,**
**சென்னை.**

தங்களை குடும்பத்துடன் அவநாசிலிங்கேஸ்வரர் திருக்கோயிலில் கண்ட என் தங்கை தொலைபேசி மூலம் எனக்குத் தகவல் கூற நான் உடனே உங்களை

காண வந்தேன். நீங்கள் உங்களுடன் வந்திருந்தவர்களுடன் விநாயகர் கோவில் தாண்டி கருணாம்பிகை அம்மன் சந்நிதி கோபுரத்தை ஆராய்ச்சி செய்து முடிக்கும் வரை உங்களையே பார்த்துக் கொண்டிருந்தேன். பின்னர், நீங்கள் அங்கிருந்து நகர முற்படுகையில் நான் என்னை அறிமுகப் படுத்திக் கொண்டேன். எந்த விதமான பதட்டம் இல்லாவிட்டாலும் கூட அந்த சூழ்நிலையில் எப்படி நடந்து கொள்வது என்று எந்த முன்னேற்பாடும் நான் செய்யவில்லை. எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்று எனக்குத் தெரியவில்லை. உங்கள் உடல் நலம் விசாரித்தேன்.

பின்னர், தங்களுடன் சிறிது நேரம் அமர்ந்திருந்தேன். அவிநாசி நண்பர் எனக்கு பிரசாதம் கொடுக்குமாறு தங்களிடம் கேட்டுக் கொள்ள நீங்கள் எனக்குப் பிரசாதம் கொடுத்தீர்கள். நான் உங்களை நமஸ்கரித்தேன். சாஷ்டாங்கமாக. நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கத் தெரியவில்லை. அரைகுறையாக குனிந்து நிமிர்ந்தேன். மனம் தங்களிடம் சரணாக்தி ஆன அளவு உடலை வளைக்கத் தெரியவில்லை.

அடுத்ததாக, தங்கள் மனைவியர்களை பார்த்து அவர்கள் இன்னார் என்று கண்டு கொண்ட பின்னரும், தங்கள் மகள் ஸ்ரீகௌரியை அடையாளம் தெரிந்த பின்னரும் என்னை நானாக சென்று அவர்களிடம் அறிமுகப்படுத்திக் கொள்ளவில்லை.

இது என்னிடம் உள்ள ஒரு குணம். இந்த குணம் கெட்டதா, முட்டாள் தனமானதா என்பது தெரியவில்லை.

என்னை வலிய யாரிடமும் அறிமுகப்படுத்திக் கொண்டதில்லை. உங்களிடம் வருவதற்கே யோசனை செய்தேன். உங்களுக்கு கடிதம் எழுத யோசித்தேன். இது மூன்றாவது கடிதம். கடந்த மூன்று வருடங்களாக என் கண்ணுக்கு பாலகுமாரன் என்று எங்கு எழுதியிருந்தாலும் அதை வாங்கி வந்து விடுவேன். எனக்கு துயரம் வரும் போதெல்லாம் உங்கள் உருவத்தை என் மனதில் நிறுத்தி, 'ஐயா, குருநாதா எனக்குத் துணையாயிருங்கள்' என அலறுவேன்.

எனக்குத் திருமண

மாகி மூன்று வருடங்கள் ஆகின்றது. நிவாசினி என்றொரு இரண்டு வயது மகள் இருக்கின்றாள். எனது மனைவி மீண்டும் கர்ப்பமாக இருக்கின்றாள். அவள் ஆரோக்கியமாக குழந்தை பெறவும் தற்போது கையில் உள்ள குழந்தையும், இனி பிறக்கப் போகும் குழந்தையும் தெளிவான நல்வாழ்வும் ஆரோக்கியமான வாழ்வும் வாழவேண்டும் என ஆசீர்வதியுங்கள்.

**பி.சீனிவாசன்,**
திருப்பூர்.

உங்களை ஆசானாக ஏற்றுக் கொண்டிருக்கின்ற நூற்றுக்கணக்கான இளைஞர்களில் நானும் ஒருவன்.

வாழ்க்கை, உறவுகள், பணம், தெய்வம், தொழில், காதல், கோபம், துன்பம் அனைத்தையும் விளக்கிக் கூறி எனக்கு விளங்க வைத்தவர் நீங்கள்தான்.

ஒரு எழுத்தாளன் என்கிற உறவு முறையை தாண்டி, வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்பட்டு, தனக்குத்தானே உரமேற்றிக் கொண்டு முன்னேறியவர் என்ற முறையில் தங்கள் மேல் எனக்கு அளவு கடந்த மரியாதை உண்டு. தான் பெற்ற அனுபவங்களைக்


# கூப்பன்கள்

**வாசகர் ஸ்கேனிங்**

**ஆனந்த நாவல்**
29, நைனான் தெரு,
அபிராமபுரம்,
சென்னை-600 018.

**ஆனந்த அனுபவம்**

**ஆனந்த நாவல்**
29, நைனான் தெரு,
அபிராமபுரம்,
சென்னை-600 018.

**நினைப்பதைச் சொல்லுங்கள்**

**ஆனந்த நாவல்**
29, நைனான் தெரு,
அபிராமபுரம்,
சென்னை-600 018.

**ஸ்நேகிதம்**

**ஆனந்த நாவல்**
29, நைனான் தெரு,
அபிராமபுரம்,
சென்னை-600 018.

**கவிதை மழை**

**ஆனந்த நாவல்**
29, நைனான் தெரு,
அபிராமபுரம்,
சென்னை-600 018.

கொண்டு, அதன்மூலம் நற்சிந்தனையும், மன வலிமையும் கொண்ட அடுத்த தலைமுறையை உருவாக்க வேண்டும் என்ற உங்கள் செயலுக்கு துணையிருப்பேன்.

வெறும் பதினைந்து ரூபாய்க்கு கிடைக்கும் நாவல்கள் மூலம் வாழ்வதற்கான சிந்தனைகளை பெற்றுக் கொண்டிருக்கும் இளைஞர்கள் பலர் உங்களைச் சுற்றி உள்ளனர் என்பதை வெகு சீக்கிரம் உணர்த்துவார்கள்.

கடந்த ஞாயிறு அன்று உங்களை திருச்சி மலைக் கோட்டையில் சந்தித்தேன். அப்பொழுதுதான் தியானம் செய்து முடித்தீர்கள். நான் வந்து பேசியவுடன் என் நெஞ்சில் உங்கள் கையால் தட்டிவிட்டு நகர்ந்து விட்டீர்கள். இதன் அர்த்தம் எனக்குப் புரியவில்லை. தயவு செய்து முடிந்தால் எனக்கு தெரியப்படுத்துங்கள்.

தென் தமிழ்நாட்டில் பின் தங்கியிருக்கும் இராமநாதபுரத்தில் வாழும் எனக்கு தங்களைச் சந்திக்க வேண்டும் என்ற ஆசை இருப்பினும், எங்கே நம்மால் முடியும் என்ற தயக்கமிருந்தது. ஆயினும் அன்று எதிர்பாராமல் உங்களைச் சந்தித்ததும், உங்களிடம் ஆட்டோகிராப் வாங்கிக் கொண்டு, தங்கள் காலைத்தொட்டு ஆசி பெற்றதும் மறக்க முடியாத தருணங்கள்...

தங்களின் நாவல்களைப் படித்தபின்புதான் தியானம் செய்ய வேண்டும் என்ற ஆவல் எழுந்து தியானம் கற்றுக் கொண்டேன். அய்யா, இப்பொழுதுதான் பி.இ. எலக்ட்ரிகல் முடித்துவிட்டு வேலை தேடிக் கொண்டிருக்கிறேன். எங்கள் ஊரான இராமநாதபுரத்தில் தாயுமான சுவாமிகள் சமாதி கோயில் உள்ளது. அங்கு நான் சென்று தியானம் செய்யும் பொழுது என்னாலேயே அதிர்வுகளை உணர முடிந்ததுண்டு. முடிந்தால் தயவு செய்து இங்கு ஒருமுறை வந்து செல்லவும்.

வறண்ட பகுதியாக இருந்தாலும் நேசம்மிக்க மனிதர்களையும் ஏராளமான வரலாற்று ஸ்தலங்களையும், புண்ணிய ஸ்தலங்களையும் கொண்டது. முடிந்தால் ஒருமுறை வந்து செல்லுங்கள்.

**கே.ரமேஷ்குமார்,**
இராமநாதபுரம்.

விரைவில்...



# பல்சுவை ஜோக்ஸ்

உங்கள்

எதிர்பார்ப்புகளை

நிறைவேற்றும்

பத்திரிகை...



# பாலகுமாரன்

ஆர்.ராம்குமார்,
மதுரை-2.

☐ பின்லேடனை இன்னும் பிடிக்க முடியவில்லையே.

★ பிடிக்க முடியாது. பின்லேடன் என்கிற கொலைகாரனை அவன் மத்தை சார்ந்தவர்கள் மிகப் பாதுகாப்பாக வைத்திருக்கிறார்கள். அவனை கொலைக்காரன் என்றோ, பல கொலைகள் செய்து துடிக்க வைத்தவன் என்றோ அவனுக்கு நெல் முனையளவும் கெடுதல் செய்யாத அப்பாவி ஜனங்களை கொன்று குவித்தவன் என்றோ சுட்டிக்காட்டாது அவனை வீரன் என்றும் தீரன் என்றும் கொண்டாடி அவனை பாதுகாத்து வருகிறார்கள். பின்லேடன் ஆப்கானில் இருக்க மாட்டான் என்பது என் அபிப்ராயம். நமது அண்டை நாடான பாகிஸ்தானிலோ அல்லது இந்தியாவின் ஏதேனும் ஒரு பகுதியிலோ இருப்பான்' என்று தான் நான் நினைக்கிறேன். பின்லேடனை தவறு செய்கிறவன் என்று சுட்டிக்காட்டுகின்ற இஸ்லாமியர்கள் வெகுசிலரே.



எஸ்.ராகவன்,
அரியலூர்.

☐ ரஜினிகாந்த் அவர்களிடம் உங்களுக்கு பிடித்த விஷயம் என்ன?

★ தேடல். தனக்கு எல்லாம் தெரியும் என்று முடிவு கட்டாமல் தன்னுடைய வாழ்க்கையை தானே உற்றுப் பார்த்து வியந்து எதனால் இது. யார் எனக்கு அருளுவது. எவரால் நான் சிறக்கிறேன். என்ன காரணம். எங்கிருக்கிறது அது, என்று இடையறாது உள்ளுக்குள் கேள்வி எழுப்பி தேடிக் கொண்டிருக்கிறவர். இதனாலேயே அவர் சிறப்பானவராக மிளிருகிறார்.

பி.பாண்டுரங்கன்,
கோவை.

☐ என் உலகத்தில் திட

# பதில்கள்

ரென்று பயங்கரவாதம் அதிகரித்து விட்டது?

★ பயங்கரவாதம், வன்முறை என்பது யாரேனும் ஒருவர் ஆரம்பித்தால் போதும். அது தொடர்ந்த காட்டுத் தீ போல ஒரு மரம் மாறி ஒரு மரம் நெருப்பு பற்றுவதைப் போல பற்றிக் கொள்ளும். நீ அடித்தாய் அல்லவா, நான் அடிக்கிறேன் என்று ஒருவரும், அவனை இவன் அடித்தான் அதனால் இவனை நான் அடிக்கிறேன் என்றும், அவனை இவன் அடித்து. இவன் அவனை அடித்ததால் நான் அடிக்கிறேன் என்று இன்னொருவரும்



கிளம்புவார்கள். வன்முறை என்பது விஷக் காய்ச்சல் மாதிரி ஒரு பெரிய சுற்று வந்து விட்டுத்தான் காணாமல் போகும்.

ஆர்.சதீஷ்,
சென்னை-33.

☐ குஜராத் படுகொலையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

★ சதி என்று சொல்ல மனம் வரவில்லை. ஆனால் யார் ஆரம்பித்தது, எதனால் அந்தப் படுகொலைகள் துவங்கின என்று பார்த்தால் திட்டமிட்ட; தெளிவான சிறுபான்மை என்கிற பெயரில் அயோக்கியர்கள் செய்து கொண்டிருக்கிற அசுரத்தனம். பிசாசு புத்தி. சகோதரத்தை வலியுறுத்தும் மதத்தை புரிந்து கொண்டவர்கள் ஒரு நாளும் இந்தக் காரியத்தைச் செய்திருக்க மாட்டார்கள். தன்னைத் தவிர தன் மதத்தைத் தவிர தன் வியாபாரத்தைத் தவிர வேறு எதுவும் இருக்கக்கூடாது என்ற ஆத்திரம் உள்ளவர்கள் இதில் ஈடுபடுவார்கள். தன்னைத் தவிர வேறு யாரும் நன்றாக இருக்கக் கூடாது என்று எண்ணுபவர்கள் கடவுளின் குழந்தைகளல்ல. சாத்தானின் வாரிசுகள்.

ஜி.சண்முகம்,
வேலூர்.

☐ நான் பத்தாவது படித்துக் கொண்டிருக்கிறேன். நான் எந்த வேலை செய்தால் நன்றாக இருக்கும்?

★ இப்போது அதைப் பற்றி எதுவும் சொல்ல முடியாது. நீங்கள் ப்ளஸ் டூ முடித்து பட்டம் பெற்று வெளியே வரும்போது இப்போது பிரகாசமாக இருக்கின்ற எந்தத் தொழிலும் மங்கி விடக்கூடும். ஐந்து வருடங்களுக்கு முன்பு கம்ப்யூட்டரே உலகம் என்று சொன்னார்கள். ஆனால், கம்ப்யூட்டர் படித்தவர்கள் வெகு வேகமாக வெளிநாட்டிலிருந்து திரும்பி வந்தார்கள். வேலையில்லாமல் இருக்கிறார்கள். மாறுதல்கள் விரைவாக வந்து கொண்டிருக்கின்றன. நீங்கள் பட்டப்படிப்பு முடித்தநேரம் எந்தத் தொழில் சிறப்பாக இருக்கிறதோ அதற்குள் புகுந்து ஜெயிக்கப்பாருங்கள். இல்லையெனில் எந்தக் காலத்திற்கும் ஏற்ற விவசாயத்தை தொழிலாகக் கொள்ளுங்கள்.

வி.கமலா,
திருவாரூர்.

☐ வயலின், வீணை, கீபோர்ட் என்று பல அற்புதமான வாத்தியங்கள்

இருக்க எதற்கு ஒரு ஜென்மத்தில் நாதஸ்வர வித்வானாக இருக்க வேண்டுமென்று ஆசைப்பட்டீர்கள்?

★ அந்த வாத்தியம் மூச்சோடு சம்மந்தப்பட்டது. ஆழ இழுத்து பலமாக ஊதினால்தான் நாதம் எழும். அதேசமயம் மிக எளிமையானது. அதே சமயம் மிகப் பழமையானது. அதே சமயம் கமகங்கள் அதில் பேசும். என் அபிப்ராயப்படி கர்நாடக சங்கீதமும், நாதஸ்வரமும் மிக நெருக்கமான விஷயம். அதுவும் தவிர பரம்பரை பரம்பரையாக வயலின் வாசிப்பவர்கள், வீணை வாசிப்பவர்கள் என்று இல்லை. நாதஸ்வரத்திற்கு மிகப் பெரிய பாரம்பரியம் உண்டு. ஒரு தமிழ் பாரம்பரியத்தை கைவிட்டு விடலாகாது என்பதும் என் அபிப்ராயம்.

டி. ஜெயலட்சுமி,
தூத்துக்குடி.

□ என்னை உருப்படாதவன், உதவாக்கரை என்று என் வீட்டில் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். தற்கொலை செய்து கொள்ளலாமா என்று தோன்றுகிறது. உங்கள் உதவி தேவை.

★ எதற்கு உதவி? தற்கொலை செய்து கொள்ளவா. அது சுயமுயற்சியால் செய்யப்படுவது. நான் உதவினால் அதற்கு கொலை என்று பெயர் வந்துவிடும். சுமார் முப்பத்தாறு வருடங்களுக்கு முன்பு என்னையும் என் வீட்டில் உதவாக்கரை என்றுதான் அழைத்தார்கள். ஒதுக்கி வைத்தார்கள். அன்று அவர்கள் கொண்டாடியவர்களுக்கு இன்று விலாசமில்லை. ஒதுக்கி வைத்த எனக்கு சென்னை நான்கு என்று போட்டால் கடிதம் வந்துவிடும். விலாசமே தேவையில்லை. ஒருபொழுதும் மனம் தளராதீர்கள். மரணம் பற்றி யோசிக்காதீர்கள். நிச்சயம் விடியும். என்ன செய்தால் ஜெயிக்கலாம் என்று இடையறாது வெறிபிடித்தது போல் யோசிக்கக் கற்றுக் கொள்ளுங்கள்.

எம். புகழேந்தி,
செய்யார்.

□ சோழர்களைத் தவிர வேறு என்னவிதமான சரித்திரக் கதைகளை எழுதப் போகின்றீர்கள்?

★ நாயக்கர்களை படித்துக் கொண்டிருக்கிறேன். அதைவிட வெகு சுவாரசியமான விஷயம் கும்பினியர்கள் உள்ளே நுழைந்தபோது சென்னப் பட்டினம் எப்படி இருந்தது என்பதைப் பற்றி, ஒரு நாவல் எழுத ஆசையாக இருக்கிறது. அதற்கான

விஷயங்களையும் சேகரித்துக் கொண்டிருக்கிறேன்.

ஆர்.வினோத்குமார்,
புதுடெல்லி.

☐ சிலப்பதிகாரம் பற்றி நீங்கள் ஒன்றும் சொல்வதில்லையே?

★ அது ஒரு நல்ல கதை. அதிலிருந்து கற்றுக் கொள்ள எதுவுமில்லை. ஆனால் கவிநயத்திற்காக பலமுறை அதை படித்து மகிழலாம். நான் மகிழ்ந்திருக்கிறேன். அதில் சில பகுதிகள் எனக்கு மனப்பாடம்.

ஏ.கோவிந்தன்,
ராமேஸ்வரம்.

☐ பான்பராக்கை தடை செய்தது சரியா, தவறா?

★ தடை செய்தது மிகச் சரி. அதை ஊருக்குள் வரவே விட்டிருக்கக் கூடாது. தயாரிப்பையே தடுத்து நிறுத்த வேண்டும். அது கெட்டது என்று தெரிந்த பிறகு அங்கங்கே தடுத்து நிறுத்துவதால் என்ன லாபம். ஆனால், இந்த போதை என்ற விஷயங்கள் எத்தனை தடுத்தாலும் ரகசியமாக உலா வரும். மக்கள் மனம் திருந்தி உதறினால் ஒழிய இது அழிந்து போகாது.

வி.சந்துரு,
செங்கல்பட்டு.

☐ உங்கள் எழுத்து யாருக்கு என்னவிதமாய் பயன்படுகிறது என்பதை நீங்கள் அறிவீர்களா?

★ இல்லை. அது என் வேலை இல்லை. அடுத்தடுத்து எழுதிக் கொண்டு போவது என்பதுதான் ஒரு எழுத்தாளனின் வேலை. அது ஏதாவது, யாரையாவது செய்து கொண்டுதான் இருக்கும். நல்லதேதான் செய்யும். அதற்கான வழிமுறைகளும், வசதிகளும்தான் என் நாவலில் இருக்கின்றன என்ற எண்ணம் மட்டும் எனக்கு போதுமானது.

கே.லட்சுமி,
சென்னை-4.

☐ நீங்கள் அதிகம் கோபப்படுவீர்களாமே?

★ சில சமயம். ஒரு நிமிடம் கொஞ்சம் குரல் உயரும். பிறகு சட்டென்று மங்கி மறைந்தோடி விடும். கோபமும் அன்பின் வெளிப்பாடுதான்.

சி.மகேஷ்,
கும்பகோணம்.

☐ இந்தியாவின் முதன்மையான பிரச்சினை என்ன?

★ மக்கள் தொகை பெருக்கம்தான். மக்கள் தொகை பெருக்கத்தால் உணவின் தேவை அதிகரித்து வறுமை தலைவிரித்தாடுவது மட்டுமல்ல, மனித உயிரின் முக்கியத்துவமும் தெரியா

மல் போகிறது. வெறும் முரட்டு, முட்டாள் பிடிவாதங்களே முதன்மையாக நிற்கின்றன. ஜனத் தொகை அதிகரிக்க அதிகரிக்க நாகரீகம் குறையும் என்பது என் அபிப்ராயம்.

கொண்டிருக்கிறார் என்று இந்த திட்டத்தின் மூலம் மிக எளிதாகத் தெரிந்து கொள்ளலாம். இங்கு மழை பெய்ய வேண்டுமென்ற வேண்டுதலும் இந்தத் திட்டத்தில் இருக்கிறது.

கர்நாடகத்தில் மிகச் சிறப்பாக நடைபெறுகின்ற இந்த அன்னதான விஷயம் தமிழ்நாட்டிலும் உண்மையாக செயல்பட்டால் மிகச் சிறந்த மாறுதலை தமிழகம் அடையும். மழை வளம் பெருகும். பொருளாதாரம் உயரும். பிரச்சினைகள் குறையும். இங்குள்ள இளைஞர்களும், யுவதிகளும் ஆரோக்கியமாக சிந்தித்து செயல்படுவார்கள் என்பது நிச்சயம். ஆனால், அரசு அதிகாரிகளுக்கு இது புரிய வேண்டும். ஆரம்பத்தில் கட்சிக்காரர்கள் சாப்பிடுவதும், கையில் காசு உள்ளவர்கள் வந்து கலந்து கொள்வதுமிருக்கும். பல்லைக் கடித்துக் கொண்டு பரிமாறினால் மெல்ல மெல்ல காலப் போக்கில் உண்மையான சாதுக்கள் வந்து சாப்பிடுவார்கள். அவர்கள் வயிறு நிறைய, மழை பொழி



**ஜி.பாலாஜி,**
**திருவள்ளூர்.**

□ **தமிழக முதல்வர் புரட்சித் தலைவி ஜெயலலிதா அவர்கள் அன்னதான திட்டம் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

★ மிக அற்புதமான திட்டம். தமிழ்நாட்டின் மீது மிகுந்த அக்கறையோடு முதல்வர் செயல்பட்டுக்

வது நிச்சயம்.

ஆர்.ராமலிங்கம்,
திருத்தணி.

□ தேசத்தில் ஒழுக்கக் குறைவு அதிக மாகிவிட்டதே என்ன காரணம்?

★ நீங்கள் எதை ஒழுக்கக் குறைவு என்று சொல்கிறீர்கள் என்று எனக்குத் தெரியவில்லை. ஆண் பெண் சமாச்சாரங்களை மறைமுகமாக குறிப்பிடுகின்றீர்களா. அதைப் பற்றி அதிகம் அக்கறைப்பட வேண்டிய அவசியமில்லை. அது தனித்தனியான நபர்களின் வாழ்க்கை. ஆனால் ஒழுக்கக்கேடு என்பது அடுத்தவரை தொந்திரவு செய்வது. சைக்கிளை ரோட்டின் குறுக்கே வைத்துவிட்டு கடைக்கு போவது. பத்தடி அகல சாலையில் தன்னுடைய சைக்கிள் நாலடியை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது என்பது பற்றிய அக்கறை இல்லாமல் ஒரு கார் அல்லது ஒரு பஸ் எப்படிப் போகும் என்பது பற்றி சிந்தனை இல்லாமல் இருப்பதுதான் ஒழுக்கக் கேடு. தெருவின் திருப்பத்தில் ஆட்டோவை நிறுத்தி வைத்து சவாரி வருகிறதா என்று சீட்டில் உட்கார்ந்து கொண்டு திரும்புகின்றவர்களுக்கு இடைஞ்சலாக இருக்கிறவர்தான் ஆபாசமானவர். தெருவில் ஒன்றுக்கு போவதும், அடுத்தவர் வீட்டு சுவற்றில் தன் கட்சிப் பெருமையை எழுதுபவனும், உரத்த குரலில் ஒலி பெருக்கி வைத்து ஓயாது பாட்டுகளை ஒலிபரப்பி அடுத்தவர் படிப்பை, தூக்கத்தை, ஆழ்ந்த சிந்தனையை கெடுக்கிறவர்கள்தான் கேவலமான பிறவிகள். தன் ஊர் கோவிலில் விழா வருகிறது என்று தார் ரோட்டில் ஓட்டை போட்டு அதன் மீது கம்பு நட்டு கொண்டாடுபவர்கள்தான் இழி பிறப்புகள். ஒழுக்கம் அடுத்தவர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் இருப்பது மட்டுமே. ஒழுக்கத்தை வெறும் ஆண் குறியிலும், பெண் குறியிலும் யோசித்துக் கொண்டிருக்காதீர்கள். இன்னும் தெளிவாக பரவலாக அடுத்தவர் வாழ்க்கைப் பற்றி அக்கறையோடு யோசியுங்கள்.

எஸ்.காஞ்சனா,
நெய்வேலி.

□ இந்த கோடை காலத்தில் எங்கே உல்லாசப் பயணம் போவீர்கள்?

★ கோடையில் பயணப்படுவதை நான் அனேகமாக தவிர்த்து விடுவேன். சென்னையிலேயே இருப்பது தான் என் வழக்கம். காலை வெய்யில் உக்கிரமாக இருந்தாலும் மாலையில் சென்னை கூடக் காற்றால் குளிர்ந்து விடும். விடியலில் அனேகமாய் குளிரும். உல்லாசப் பயணம் மேற்கொள்ள அக்டோபர், நவம்பர், டிசம்பர், ஜனவரி இவை தான் அற்புதமான மாதங்கள் என்பது என் அபிப்ராயம். என்னால் குளிர் தாங்க முடியும். வெய்யிலை அனுபவிக்க இயலாது. ●

# வில்வ மரம்

## பாலகுமாரன்

"என்னால என் குழந்தைக்கு என்ன செய்ய முடியுமோ அத்தனையும் செய்யறேன்."

அப்பா முதுகு வளைத்துக் கைகட்டிப் பேசினார்.



வந்தவர்கள் மௌனமாய் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அப்பாவுக்கு அளவு தெரியும். எங்கே அதிகம் பேசலாம், பேசக்கூடாது என்று தெரியும். கம்பீரமும் பவ்யமும் எங்கெங்கு என்னென்ன விகிதத்தில் காட்ட வேண்டும் என்பது தெரியும்.

"அதுக்கில்லை, உங்க வீட்டுப் பெண்ணை எங்களுக்குப் புடிச்சிருக்கு. உங்க குடும்பம், வம்சாவளி எல்லாம் நல்லமாதிரியாத் தெரியறது. போய்க் கடுதாசி போடறோம்னு விரல் பின்னை விடாத இதை நாங்க நேரயே சொல்றோம்."

"ரொம்ப சந்தோஷம்; உங்க சம்பந்தம் எங்க பொண்ணுக்குப் பெரிய பாக்கியம். மேற்கொண்டு சகலமும் நல்லபடியா முடியணும்."

"அமரிக்கையாப் பண்ணினாப் போறும். பெரிய ஆடம்பரம் வேண்டாம். அஞ்சு பேர் பெண் பார்க்க வந்துருக்கோம். அம்பது பேர் கல்யாணத்துக்கு வருவோம். அவ்வளவுதான்."

"சமாளிச்சுடுவேன். சம்பந்தம் ஏற்பட்டாச்சுன்னா போறும். காசில்லைன்னு எந்தக் கல்யாணமும் நிக்காது. காசு வேணும்னு கையேந்தினா தர மாட்டேன்னு சொல்ல முடியாத விஷயம் உலகத்துல ரெண்டு உண்டு. பெரியவாளுக்குத் தெரியாம இருக்காது. ஒண்ணு பொண்ணு கல்யாணம்."

எதிரே உட்கார்ந்திருந்த பெரியவர் 'தெரியும்' என்பது போல தலையசைத்தார். மறுபடி மௌனம் சூழ்ந்து கொண்டது.

"இன்னொரு விஷயம் என்ன சார்." மாப்பிள்ளையோடு வந்த விடலைப் பையன் கேட்க, பெரியவர் முகம் சுளித்தார்.

"சபைல சொல்லக்கூடாது. கேட்டுட்டேள். சொல்றேன். இன்னொண்ணு அம்மா தகனம். இது ரெண்டுக்கும் பேர்க் காசு வேணும்னு கையேந்தினா மாட்டேன்னு சொல்ல மாட்டா."

"ஓஹோ...." விடலை வியந்தது.

"இந்தக் காலத்துல குழந்தைகளுக்கு இந்த வியாக்கியானமெல்லாம் தெரியறதில்லை. அவா வேற உலகம்."

"அது வாஸ்தவம். எது கேட்கப்படாதோ அது கேட்கறான் பாருங்கோ."

"தெரிஞ்சுக்கணும்னு ஆசைப்பட்டார். சொல்றதுல தப்பில்லை."

"நிக்கிறேளே, உட்காருங்கோ, பேசுவோம்." பெரியவர் முகம் முழுக்க சிந்தனையோடு கட்டளையிட்டார்.

"பரவாயில்லை. நிக்கறேன்."

"அப்போ இன்னொரு நடை நான் மட்டும் வந்து

பேசட்டுமா."

"ஆஹா... தாராளமா வாங்கோ. இது உங்க வீடு மாதிரி. எனக்கு நாலு இடம் சுத்தற வேலை. குழந்தை இருப்பா. என் சக தர்மிணி இருப்பா."

"அடடே, அது வேறயா...."

"அவஸ்யம்னா சொல்லுங்கோ, நானும் லீவு போட்டுட்டு இருக்கேன்."

"வேண்டாம். இப்பவே பேசிடுவோம். என்ன செய்வேள். சொல்லுங்கோ."

"என்னால என்ன செய்ய முடியுமோ அத்தனையும் என் குழந்தைக்குச் செய்யறேன்."

"பட்டுன்னு இதுதுன்னு சொன்னாதானே நல்லது. சுத்தி வளைச்சுண்டேயிருந்தா எப்படி..." பையனின் தாயார் வெடு வெடுத்தாள்.

பெரியவருக்கு அந்த உடைப்பு மகிழ்ச்சி அளித்தாலும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. "சும்மாயிரு. சொல்லாமலா போயிடுவார். என்னமோ தயக்கம். என்ன எதிர்பார்க்கறோமோன்னு அவருக்குள்ளயே கேள்வி. நாம ரெண்டாயிரம் எதிர்பார்த்து அவர் நாலாயிரம்னு வெளிய பேச ஆரம்பிச்சா நமக்குத்தானே நஷ்டம்."

"பொண்ணுக்குச் சீர் பண்றது நஷ்டமாயிடுமா சுவாமி. அவ சந்தோஷத்துக்குத்தானே செய்யறது. தாராளமா செய்யலாம், வரைமுறையே இல்லை. குடித்தனம் பண்றவன் ரெண்டு விஷயத்துல வஞ்சனை பண்ணமாட்டான். ஒண்ணு பெண்ணுக்குச் சீர் பண்றது..."

"இன்னொண்ணு அம்மாவுக்கு ஹெல்ப் பண்றது.." விடலை குறுக்கிட்டது.

"இல்லை, பெண்ணுக்குச் சீர் பண்றதும் பிள்ளை வயித்துப் பேரனைக் கொஞ்சறதும் வஞ்சனையில்லாம நடக்கும். பொண்ணோ, பேரனோ அழுதாக் குடும்பிக்குத் தாங்காது. அதுவும் பிள்ளை வயித்துப் பேரன்..."

"அடேங்கப்பா." விடலை மறுபடி வியந்தது.

"எனக்கு இவன் ஆறாவது பையன், சுவாமிகளே. எட்டுக் கல்யாணம் நடந்திருக்கு வீட்ல. இவன் கல்யாணம் ஒன்பதாவது. நல்ல பொண்ணு வேணும்னு இவன் ஆசை. சீர் நீங்க சொன்னபடி உங்க இஷ்டம். நான் குறுக்கே நிக்கலை. இவன் லிமிடில வேலை செய்யறவன். நான் கிளியனூர்ல இருக்கேன். ஓட்டல் சாப்பாடு ஒத்துக்கலை இவனுக்கு. அதனாலதான் கல்யாணத்துக்கு அவசரப்படறேன். குழந்தைக்கு வேண்டிய சாமான் செட்டோட அனுப்பிச்சிடுங்கோ. நகையோ நட்டோ உங்க இஷ்டம். துணி

மணி வகையறாக்கு ரெண்டாயிரம் போறும்."

"சாமான் லிஸ்டிலே கட்டில், பீரோ எல்லாமா."

"கொடுங்கோ. வேணாம்னு சொல்லலை. உங்க பொண் ஆண்டுட்டுப் போறா. எனக்குக் கிளியனூர்ல நல்லக் கயித்துக் கட்டில், நானே பின்னினது இருக்கு."

"ஆயிரம் ரூபா போறாதா துணி மணிக்கு. நான் கட்டில், பீரோ கணக்குல சேர்க்கலை."

வீடு கவலை கொண்டது. சமையலறையில் அப்பாவைத் தவிர உட்கார்ந்திருந்த அத்தனை பேரையும் பிடித்து உலுக்கிற்று.

லிஸ்ட் போட்டார்கள். அப்பா வாங்கிச் சுருட்டி வைத்துக் கொண்டார்.

"உங்க வொய்ஃப்பைக் கூப்பிடுங்கோ. எது கிழக்கு. தாம்பூலம், மஞ்சள் கிழங்கு, சந்தனம், குங்குமம் வச்ச தாம்பாளம் வேணும்."

"இப்ப உட்காரலாம். தப்பில்லை. சாட்சி யாரு உங்க பக்கம் இவரா. பக்கத்து வீடா. சந்தோஷம். பொம்மணாட்டியும் உட்காரலாம். தப்பில்லை.

தாம்பூலம் வாங்கிக்கலாம். தஞ்சாவூர் கிளியனூர் கிராமம் மிராசுதார் வைத்திய நாத வெங்கட்ராமன் மகனாகிய நான், என் பிள்ளை சிரஞ்சீவி ராஜாமணிக்கு, தஞ்சாவூர் நன்னிலம் சார்ந்த சென்னைப் பட்டினத்தில் வசிக்கிற ஸ்ரீமான் சுப்பிரமணியின் சீமந்தப் புத்திரியாகிய சௌபாக்கியவதி வேதவல்லி என்கிற வத்சலாவைக் கன்னிகாதானமாக ஏற்றுக்கொள்ள முழு மனத்துடன் சம்மதிக்கிறேன். ஸ்ரீமத் வெங்கடாஜலபதி சகாயம் தாம்பூலம் வாங்கித் திரும்பிக் கொடுங்கோ டும் டும் டும் டும் டும்... இப்பல்லாம் நம்ம வீட்டுக் கல்யாணத்துல நாமேதான் மேளம் கொட்டிக்கணும்."

வீடு இந்த வாசகத்துக்கு மலர்ந்தது. மலர்கிற பொழுதே நல்லபடியான மாலையாக வேண்டுமே என்று கவலைப்பட்டது.

"ரொம்ப சந்தோஷம், ரொம்ப சந்தோஷம்." அப்பா திக்குமுக்காடிப் போனார். இத்தனை சுலபமாய் இது முடியும் என்ற நினைப்பைப் பல வகையாய் வெளிப்படுத்தினார்.

"பதற வேண்டாம்; எல்லாம் நல்லபடியாக முடியும்." பெரியவர் அமைதிப்படுத்தும்படியாயிற்று.

"பதற்றம் இல்லை. ஒரு கவலை கலந்த பரவசம்." அப்பா விளக்கம் சொன்னார். ஆண்களுக்கு உலகத்துல இரண்டு விஷயம் இப்படிப் பரவசமானது. ஒண்ணு அனுபவிச்சிருக்கேன். இன்னொண்ணு அனுபவிக்கிறேன்."

"சார், அது ரெண்டும் என்ன." விடலை குறுக்கிட்டது.

''சொல்றேன். தன் மனைவி முதன் முதலா உண்டாயிருக்கான்னதும் ஒரு பரவசம் வரும். அடுத்து...''

''மூத்த பொண்ணு நிச்சயதார்த்தம்.'' விடலை பதில் சொல்லிற்று.

''கரெக்ட் சார். ரொம்ப சூடிகை. பேர் என்ன.'' ஏதோ சொன்னார்கள். வத்சலா காதில் விழவில்லை.

வத்சலா ஓடிப்போய் ஜன்னல் வழியே தெருவில் நிற்கிற வாடகைக் காரை உற்றுப் பார்த்தாள். கர்சீப் நுனியினை இரண்டு கைகளாலும் பிடித்துக் கொண்டு மூன்று சுற்றுச் சுற்றி மாப்பிள்ளையாக வந்தவன் கழுத்துக் காலரில் செருகிக் கொண்டான். அவன் ரப்பர் செருப்புப் பின்பக்கம் அழுந்தித் தேய்ந்திருந்தது. சகலரும் ஏற வாடகைக் கார் புறப்பட்டது.

அப்பாகிட்ட நல்லதாப் பத்து கர்ச்சீப்பும் தோல் செருப்பா இரண்டு ஜதையும் வாங்கச் சொல்லணும். ஸிடிலதான் குடித்தனமாம். எல்லா சாமான் செட்டும் வேணும்னு அடம் புடிக்கணும். இரண்டு காபி ஃபில்டர் வேணும். பித்தளைல ஒண்ணு. எவர்சில்வர் ஒண்ணு. அப்பாவுக்கு முடியுமோ. எல்லாச் செலவும் போக இன்னிக்குக் கையிருப்பு நாப்பது ரூபாதான்னார். அப்பாவால் முடியுமோ.

முடிந்தது. ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்து மூன்றாம் வருடம் ஜனவரி இருபத்து ஒன்றாம் தேதி வெகு விமரிசையாய் வத்சலாவின் கல்யாணம் நடந்து முடிந்தது.

''என்னால என்ன முடியுமோ என் குழந்தைக்கு அத்தனையும் செய்யறேன்'' என்கிற வார்த்தையை அப்பா காப்பாற்றினார். கடன் பட்டார். இது கடனில்லை, காந்திக் கணக்கு என்று சிலரிடம் காசு வாங்கினார். அம்மாவின் செயின், கை வளை எல்லாம் மெருகேற்றிக் கணக்கில் சேர்த்தார். நாலாயிரம் ரூபாய் குலுக்குச் சீட்டை ஆயிரத்து எண்ணூறு தள்ளி எடுத்தார். கூறைப் புடவை தவிர, மற்றதெல்லாம் மாதாந்திரக் கடனில் வாங்கினார்.

கல்யாணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர். ஆனால் உழுது விதைத்து நாற்று நட்டு நட்வு நடத்திக் களையெடுத்து நீர் பாய்ச்சிப் பயிர் காத்து கதிர் அறுத்துக் கட்டுக் கட்டிப் போரடித்து தானியம் கொண்டுபோய் சேர்க்கிறதுக்குள் நாக்குத் தள்ளிவிட்டது. 'எதற்கு இந்தப் பயிர்த் தொழிலில் மாட்டிக் கொண்டோம்.' என்று தோன்றி விடுகிறது.

அப்பாவுக்கு இன்னும் வத்சலாவுக்குப் பிறகு இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள்.

''அப்பா நீ தஞ்சாவூர் மிராசா. உன்னால் மூணு போகம் செய்ய முடியுமா.''

வத்சலா கவலைப்பட்டாள். தனிக்குடித்தனம் போகும்

மூன் அப்பா மடியில் படுத்து விசும்பி விசும்பி அழுதாள்.

''அம்மாடி வத்சலா, இப்போ ஒரு முக்கியமான விஷயம் சொல்லப்போறேன். நான் சொல்லப் போறதைத் தைரியமாத் தெளிவாப் புரிஞ்சுக்கணும். உன் கல்யாணம் முடிஞ்சு இப்போ என் கையிருப்பு இருபது ரூபா நாப்பது பைசா. ஏதோ கொஞ்சம் அரிசி, பருப்பு, ரவை மிச்சம் இருக்கு. பத்து நாள் ஓடும். அப்புறம் செலவுக்கு உங்கம்மா தாலிக்கொடித் தகடை கயிறுல கோத்துண்டு கொடியைக் குடுன்னு கேட்கப் போறேன். வட்டி போக ஒரு மாசச் செலவு ஓடும். அதற்கு பிறகு கடவுள் விட்ட வழி. இது வீட்டு நிலைமை.

''இதைத் தெளிவாப் புரிஞ்சுக்கணும். ஸிடில எண்பது பைசா பஸ் சார்ஜ் தூரத்தில குடியிருக்கோம்னு நினைச்சுண்டு உன் வீட்டுக்காரரோட அடிக்கடி இங்கே வராதே தாயி. உன்னைப் பார்க்க எனக்கு ஆசை. வரமாட்டேன். வந்தா வெறுங்கையோட வரமுடியுமா. மூணு ஆரஞ்சுப் பழமாவது வேணுமே. எனக்குத் தாங்காது. நான் உன்னை ஒதுக்கல வத்சலா. நான் ஒதுங்கியிருக்கிறேன். ஒளிஞ்சுக்கறேன். பனியன் கிழிசலை மேல் துண்டால் மறைக்கிறாப்போல அப்பாவோட வறுமையை நீ சிரிச்சுப் பேசி மறைச்சாகணும். ஆடிச் சீர், தீபாவளி மோதிரம் எதுவுமே இல்லாம சமாளிச்சாகணும். பொம்மனாட்டியால முடியாதது எதுவுமில்லை வத்சலா. என்னைக் காப்பாத்து. இன்னும் நாலு குழந்தைகளுக்கு நான் மோர் சாதமாவது போடணும். இது உன்கிட்டதான் இருக்கு.''

வத்சலா அதிர்ந்து போனாள். வீட்டு ஏழ்மை இவ்வளவு பெரிதாய் இதுவரை ஒரு நாளும் தெரிந்ததில்லை.

இன்னும் இரண்டு தங்கைகள் உண்டு. பத்மா, ராதா. இரண்டு தம்பிகள் உண்டு... ஸ்ரீதர், ரகு. இரண்டு பெண்களும் மலர்ந்து மணம் வீசத் துவங்கி விட்டார்கள். ஸ்ரீதர் பேண்ட் போட ஆரம்பித்து விட்டான். ரகு முகவாயில் ஆட்டு ரோமம் வளர ஆரம்பித்து விட்டது.

''இந்தக் குழந்தைகளுக்கு மோர் சாதமாவது போட வேண்டாமா. எண்பது பைசா தூரம்தானே. அப்பா வீடுன்னு வராதேம்மா...''

''வரமாட்டேன்.''

''பொம்மனாட்டியால முடியாதது இல்லை வத்சலா. என்னைக் காப்பாத்து.''

''காப்பாற்றுவேன். சகல உபாயங்களும் செய்து காப்பாற்றுவேன்.''

வீடு கதறிற்று. வத்சலா மௌனமாய் இருந்தாள். தங்கைகள் கட்டிக்கொண்டு அழுதார்கள். பெரிய தம்பி ஸ்ரீதர் நிலைப்படியில் சாய்ந்துகொண்டு கண்ணீர் விட்டான். வத்சலா அவன் கண்ணீரைத் துடைத்துத் தோளைத் தட்டிக்

கொடுத்தாள்.

"அக்கா..." சுவாமி படத்துக்கு நமஸ்காரம் பண்ணுகையில் கடைசி தம்பி ரகு கிசுகிசுத்தான்.

"எம் பள்ளிக்கூடத்துக்கிட்ட தானேக்கா உன் வீடு. மத்தியானம் பசிச்சா வரட்டுமா."

"வேண்டாம்." மறுத்தாள். "ரொம்ப பசிச்சா வா" என்று மாற்றினாள்.

திடமாய் வாடகைக் காரில் புருஷனுடன் ஏறினாள். வண்டி கிளம்பிற்று. புருஷன் திரும்பிக் கையசைத்தபடி வந்தான். வத்சலா இறுக்கமாய் எதிரே பார்த்துக் கொண்டிருந்தாள்.

# 2

முதல் மாடியில் வத்சலா போர்ஷன். மாடியில்இரண்டு சிறகாய் வீடுகள். இடது கோடியில் கடைசி போர்ஷன் தாண்டி யாரும் போக முடியாது. பால்கனி தெருவில் முடியும். ஒரு ஹால், கொஞ்சம் பெரிய சமையலறை, பின்னே பாத்ரும், லெட்ரின். இருநூறு ரூபாய் வாடகை. சமையலறையில் தனியே குழாய், பூமியடித் தண்ணீர். கார்ப்பரேஷன் தண்ணீர் சமையலுக்கும் குடிக்கவும் கீழிருந்து மூன்று குடம் கைப்பிடி பம்ப்பில் அடித்து வரவேண்டும். எதிர்ப்பக்கமே காய்கறிக் கடை, மளிகைக் கடை.

ராஜாமணிக்கு ஒன்பதரைக்கு ஆபீஸ். அரைமணி சைக்கிள் பயணம். ஐந்து மணிக்கு முடியும். ஐந்து முப்பத்தைந்துக்கு வந்துவிட முடியும். ஆயிரத்து நானூற்று ஐம்பது ரூபாய் சம்பளம் கைக்கு வரும். ஓவர் டைம் செய்தால், கூட வரும். இருபது பர்ஸண்ட் போனஸ் வரும்.

வழி முழுக்க ராஜாமணி விவரம் சொல்லிக்கொண்டே வந்தான். வீடு ராஜாமணி விவரித்ததுபோலவே இருந்தது. படியேறியதும் பெண்கள் வழி மறித்து ஆரத்தி எடுத்தார்கள்.

"பிள்ளை வீட்டு மனுஷா வரலை. உங்கம்மாவாவது துணைக்குக்கூட நாலு நாள் வந்திருக்கப்படாதோ." முதிர் பெண்மணி ஆதூரமாய் கேட்டாள்.

"நீங்கள்ளாம் இருக்கேளே துணைக்கு." வத்சலா சொன்னதைப் பல் தெரிய சிரித்து வரவேற்றாள்.

சுவாமி படத்துக்குக் குத்து விளக்கேற்றிக் கொண்டு வந்து, சின்னக் கட்டுசாதக் கூடையைப் பிரித்து மேல் மாடி எல்லா வீட்டுக்கும் பட்சணம் பிரித்துக் கொடுத்துவிட்டுக் குங்குமம் வாங்கிக் கொண்டாள். எல்லார் வீடும் இவள் போர்ஷன் மாதிரியே அளவு. ஆனால் அடைசலாய் இருந்தது.

தன்னிடம் சாமான்கள் குறைவு. அதனாலதான் 'ஹோ'

என்று பெரிதாய் தெரிகிறது வத்சலா நினைத்துக் கொண்டாள்.

கதவுகளைச் சாத்தி விட்டுப் புருஷனும் மனைவியும் களைப்பாய் பகல் தூக்கத்திற்குப் படுத்தார்கள்.

ராஜாமணி நகர்ந்து வத்சலாவை இறுகக் கட்டிக் கொண்டாள். வெறியோடு முத்தமிட்டாள். 'இன்னும் நெருங்கி வா' என்பதுபோல இழுத்தாள்.

"இப்ப வேண்டாமே."

"ஏன் பயம்மா இருக்கா."

"இல்லை..."

"பயமில்லையா."

"பயம்தான். வந்தவுடனேயே கதவு ஜன்னலை மூடிண்டுட்டாள்னு பக்கத்துலயே நினைச்சப்பா."

"நினைச்சுக்கட்டுமே."

"அது நன்னாயிருக்காது."

"அவா என்ன உறவா, ஊர்ஜனமா தொடிக்கறதுக்கு பக்கத்துப் போர்ஷன். நமக்கும் அவங்களுக்கும் சம்பந்தமேயில்லை."

"அப்படியிருக்க முடியுமா, மனுஷா வேணுமே."

"மனுஷா வேண்டாம்னுதானே ஈரோடு கிளியனூர் போகாம தனிக்குடித்தனம் வச்சேன். கிளியனூர்லே இப்படிப் பகல்ல படுத்து உருள முடியுமா."

"படுத்து உருள்றது மட்டுமா குடித்தனம். எத்தனையோ இருக்கு. நல்லபடி குழந்தைகள் பெறணும். அதுகளைப் படிக்க வைக்கணும். நல்லதுகளா, சமர்த்தா வளர்க்கணும். கல்யாணம், கார்த்தி செய்யணும், குடித்தனம்னா சாதாரணமா. கொஞ்ச நஞ்சக் கஷ்டமா."

"அடேங்கப்பா, எங்கேயோ போயிட்டியே. உள்ளே நுழைஞ்சதும் அத்தனை பொறுப்பா."

"பட்டிருக்கேனே."

"என்னது."

"ஒண்ணுமில்லை."

"சொல்லு. ஏன் மறைக்கறே."

"மறைக்கலை. ஒரு பொண்ணைக் கல்யாணம் பண்ணிக் குடுக்கறதுக்கு நம்ம மாதிரிக் குடும்பத்துக்கு எத்தனை சிரமம்னு எனக்குத் தெரியும்."

"உங்க வீட்டைச் சொல்றியா."

"எல்லா வீட்லயும்தான் இந்தக் கஷ்டம்."

"கரெக்ட். எங்க வீட்டு நிலவன் எல்லாம் கல்யாணம் பண்ணியே கை மாறிடுத்து இப்ப ஒரு ஏக்கர் நிலம், ஒரு ஓட்டு வீடு. மிராசு பட்டம் இதுதான் பாக்கி, மைதான் போன பிறகு

வாடாறுட்டார் அப்பா."

"ஏன்."

"வீடு ஒழுகும். ரிப்பேர் பண்ணக் கை வச்சா ஆயிரக் கணக்குல போகும். முடியாது. ஹாலைத் தவிர வேற எங்கேயும் படுக்க முடியாது."

"நாம அப்படி இருக்கப்படாது."

"எப்படி."

"கடைசி காலத்துல ஒழுகிற வீட்ல இருக்கப்படாது. புள்ளையோ பொண்ணோ வீட்டுக்கு வரவேண்டாம்னு சொல்ற நிலையில இருக்கப்படாது."

"பன்னெண்டு பெத்தா எங்கம்மா. மிஞ்சினது ஒன்பது. நான்தான் கடைசி. இத்தனைக்கும் ஒரு கெட்ட பழக்கம் கிடையாது அப்பாவுக்கு. ஆறு பொண்ணு பெத்தது தப்பாயிடுத்து."

"தப்புத்தான்."

"அப்பத் தெரியலை."

"இப்பத் தெரியறதே நமக்குப் பளிச்சுன்னு. அதனால சொல்றேன்."

"என்ன..."

"பகல்ல எதுக்கு."

"அது சரி. அதுக்காக இன்னும் தலையணையைக் கட்டிண்டு நான் படுத்துக்கணுமா. முடியாது போ." கெஞ்சினான்.

"கட்டிக்கலாம். வேண்டாம்னு சொல்லலை."

"முடியாது. வேணும்."

"ஐயய்யோ."

"இப்பவே வேணும்."

"மாட்டேன்னு சொல்லலை. ஜாக்கிரதையா இருக்க வேண்டாமா."

"இரேன்."

"இரேன்னா, நான் மட்டுமா."

"சரி, நான் என்ன பண்ணணும்."

"சந்தோஷமாய் இருக்கணும். சமர்த்தாவும் இருக்கணும்."

"இருக்கேன். என்ன செய்யணும் அதுக்கு."

"சொன்ன பேச்சைக் கேட்கணும்."

"யார் பேச்சை."

"நான் சொல்ற பேச்சை."

"அடி சக்கை. எங்கம்மா சொன்னது சரியாப் போச்சு. நீ சமத்துதான்."

"என்ன சொன்னா."

"பொண்ணு கெட்டிக்காரியா தெரியறா, சீக்கிரம் உன்னைக் கைக்குள் போட்டுப்பா. ஜாக்கிரதைன்னு சொன்னா."

"சரி. உங்க இஷ்டத்துக்கு என்ன வேணா பண்ணிக்கலாம்." அவனைவிட்டு நகர்ந்து வத்சலா மல்லாந்து கொண்டாள்.

"கோவமா."

"இல்லை."

"வெறுப்பா."

"ச்சேச்சே."

"என்னைப் பிடிக்கலியா."

"என்னைப் பிடிக்கலையோன்னு கவலை."

"நான் சொல்லலியே அப்படி."

"உங்கம்மா சொல்லியிருக்காளே கைக்காரி அது, இதுன்னு."

"சும்மா ஒரு விளையாட்டுக்குச் சொன்னேன்."

"பொய் சொன்னேளா."

"இல்லை. நெஜம்தான். எங்கம்மா வாயா வார்த்தையாச் சொன்னது நிஜம்தான்னு நம்பினா மாதிரி டுப் அடிச்சேன்."

"நான் கைக்காரியா."

"இல்லைன்னு தோணறது."

"எப்படி."

"எது வேணாப் பண்ணிக்கோங்கோன்னு மல்லாந்துப் பியா, எழுந்து போய் மூலைல உட்கார்ந்து முசு முசுன்னு அழுவ."

"நான் எதுக்கும் அழமாட்டேன். தீர்மானம் பண்ணியாச்சு."

"ஏன் அப்படி."

"அழுதது போதும்."

"எதுக்கு அழுதிருக்கே."

"எத்தனையோ..."

"சொல்லேன்."

'குடும்பத்துல மூத்த பெண். உங்களது மாதிரியே வாழ்ந்து கெட்ட குடும்பம். உங்க சம்பளத்தை விட நூறு ருபா கம்மி எங்கப்பாவுக்கு. சிரிச்சுண்டா வளைய வரமுடியும். எட்டணா அதிகம் செலவு பண்ணினாக்கூட எங்கப்பா திட்டுவா."

"நான் திட்டமாட்டேன். ஆயிரத்து நானூத்தி அம்பது ருவாயைச் செலவு பண்றியோ சேர்க்கறியோ... உன் இஷ்டம்."

''பண்ணுடீன்னு நீங்க சொன்னாக்கூட ஒரு பைசா அதிகம் செலவு பண்ண மாட்டேன்.''

''செலவுக்குத்தானே சம்பாதிக்கறேன்.''

''வாஸ்தவம். செலவழிச்சுட்டு அவசியமானப்போ அடுத்தவா நிழல்ல இடம் கேட்கப்படாது. ஒருத்தர்கிட்ட கொடுன்னு கையேந்தக் கூடாது. சொந்த அப்பாவானாலும் சரி.''

''வாஸ்தவம்.''

''நம்ம சம்பாத்தியம். நம்ம செலவு.''

''கரெக்ட்.''

'நாம யாருக்கும் தரவேண்டாம். நாம யாரையும் கேட்க வேண்டாம்.''

''வெரி குட்.''

''ஊருக்கு அனுப்பணுமா இந்தக் காசுல.''

''வேண்டாம்.''

''எனக்காகச் சொல்றேளா, இல்லை நிஜம்மாவா.''

''நெல்லு வருது. அஞ்சு, பத்து பத்திரம் எழுதிப் பஞ்சாயத்துப் பண்ணி சம்பாதிச்சுப்பார் அப்பா. வாத்தியார் பென்ஷன் வேற வாங்கறார். அவருக்குப் போதும்.''

''என்னைத் தப்பா நினைச்சுக்க மாட்டாளே கிளியனூர்ல.''

''இது எப்பவோ தீர்மானமான விஷயம். உனக்கும் இதுக்கும் சம்பந்தமேயில்லை. நிலத்தை வித்து என் பங்கை அனுப்புன்னு நான் கேட்காம இருந்தாப்போதும்.''

''என்னா...''

''ம்ம்.''

''கட்டிக்கோங்களேன்; கிட்டதானே இருக்கேன்.''

''எதுக்குப் பகல்ல.''

''யார் கேட்கப்போறா நம்மை.''

''ம்... கிளியனூர்லேர்ந்து எங்கம்மா வந்து உன் கன்னத்தைத் திருகுவா. 'என்னடி இது பகல்ல வெட்கங்கெட்டதனமா இருக்குன்னு.''

''ப்பா.. வலிக்கிறது.''

''வலிக்கும்.''

''நான் உங்கம்மாவுக்கு எத்த மாதிரி பதில் சொல்லிக்குவேன்.''

''என்ன சொல்வே.''

''பயப்படாதீங்கோ மாமி. பகலோ ராவோ இன்னும் ரெண்டு வருஷத்துக்குப் புள்ளை பெத்துக்க மாட்டேன்'னு.''

''ஏன் வத்சலா.''

''கொஞ்சம் செட்டில் ஆகணும்னா நம்ம. அஞ்சாயிரம் ரூபா சேர்க்கணும்.''

''எதுக்கு.''

''புள்ளை பெத்து நல்லபடி வளர்க்க.''

''வெரிகுட்.''

''எம்மேல கோவமில்லையே.''

''அடேங்கப்பா, இப்படிப் பொண்டாட்டி வேணும்னுதானே ஆசைப்பட்டேன்.''

''கோட்டை கட்டிக் காட்டறேன் பாருங்கோ ஆயிரத்து நானூறுல...''

''மிச்சம் அம்பது.''

''அது சினிமாவுக்கு. மாசம் மூணு படம். அம்பது ரூவா ஆகாதா... தலைக்குப் பூ. காபி டிபன் செலவோட.''

''ஆகும்.''

''எனக்குச் சினிமா பிடிக்கும். உங்களுக்கு.''

''ம்ம்... போரடிச்சா வேற வழி சிடில.''

''சாயந்திரம் ஆறு மணி டிபனுக்குப் பதினோரு மணிக்கே உப்புமா கிளறி வச்சுட்டு, அரக்கப் பரக்க அப்பாவுக்குத் தெரியாம சினிமா போறது இருக்கே படுகுஷி தெரியுமோ. காத்தாலேர்ந்து ஒரே டென்ஷனாயிடும் எங்க வீட்ல.''

ராஜாமணி வாய்விட்டுச் சிரித்தான்.

''இனிமே டென்ஷன் இல்லாம சினிமா போகலாம்.''

''எத்தனை கஷ்டம் இருந்தாலும் எங்க வீடு ஒரு ஜாலி டைப்.''

''இப்ப என்ன அதுக்கு. உனக்கு என்ன குறைச்சல் இங்கே.'' ராஜாமணி இறங்கி அவள் நெஞ்சில் முகம் உரசினான்.

''அம்மா... கடவுளே... ... என்னது முரட்டுத்தனம்.''

''வட்டநிலா வான் வெளியில் காவியம் பாடும். கொண்ட பள்ளியறைப் பெண் மனத்தில் போர்க்களமாகும்.''

பகலும் இரவுமாய் போர் நடந்தது. ராஜாமணி இரண்டாவது வருடமே தகப்பன் என்ற மகுடம் சூட்டிக் கொண்டான். மூன்று மாதம் என்று டாக்டர் பாராட்டியபோது கர்வப்பட்டான். வத்சலா கவலைப்பட்டாள்.

# 3

அம்மா ஓடி வந்தாள். ''என்ன இது, இன்லெண்ட கடுதாசு எழுதறே மூணு மாசம் குளிக்கலைன்னு. ஒரு நடை மாப்பிள்ளையை அனுப்ப மாட்டியோ.''

''மாட்டேன். இப்பக்கூட உன்னை வான்னு எழுதலையே.''

''எழுதலைன்னா வராம போயிடுவேனா. வந்து நெட்டி முறிச்சுத் திருஷ்டி கழிக்காமப் போவேனா.''

''போக வர பஸ்ஸுக்கு ரெண்டு ரூபா செலவு, எதுக்கும்பார் அப்பா.''

''செலவுதாண்டி. கடன் பட்டாவது பேரனை நெஞ்சுல தாங்குவோம்.''

''எதுக்கு இன்னமும் கடன் படணும். வேண்டிய கடன் பட்டாச்சு. வேற வீட்டுக்கு அனுப்பியாச்சு.''

''இது எங்க செலவு இல்லையா.''

''இல்லை.''

''ஏண்டீ.''

''அஞ்சாயிரத்து எழுநூறு ரூபா இருக்கு. புள்ளை பேருக்குச் சேர்த்தது. போனஸ், ஓவர்டைம், ப்ரமோஷன்னு வந்தது எல்லாம் சேர்த்து மாசாந்திரம் பிடிச்சுப் பத்தொன்பது மாசத்துல சேர்த்து வச்ச காசு.''

''என்னடி கணக்குச் சொல்றே. நானும் காசு சேர்த்துப் பண்ண வேண்டியதெல்லாம் பண்ணினேனே அது மாதிரி...''

''ஆமா... ஆடிப்பெருக்குக்கு வெள்ளி டம்ளர் பண்ணினியே அதைவிடச் சின்னதாப் பண்ண முடியாது. தலை தீபாவளிக்கு வெறும் பட்டு வேஷ்டி, சட்டை தந்தே. நாங்க கணக்குக் கேட்டமா. கோவப்பட்டமா. இதுவே உனக்கு முடியலை. அதனால செய்யல. சும்மா இருந்துட்டோம். என் புள்ளைப் பேறை உங்க வீடு தாங்காது. அதனால கணக்குப் பார்த்துச் சேர்த்து வச்சோம்.''

''மாப்பிள்ளை கோவிச்சுண்டாரா.''

''அவரா... தங்கம் சொக்கத் தங்கம். போய் கோபப்படுங்கோன்னாக் கூடத் தெரியாது. சரி வுடுறின்னு நகர்ந்து போவார் என் புருஷன்.''

''நாங்க பார்த்து வச்சு புருஷன்தான்டி.''

''இல்லை. எனக்கு அமைஞ்சது. குணம் பார்த்துக் கொடுக்கலை என்னை. குறைச்சலாக் கேட்டாள்னு கொடுத்துட்டேள். நல்ல வேளை, வாக்கப்பட்ட இடத்துல பிடுங்கல் இல்லை. வாழ்க்கை கொடுத்தவா் கெட்டவரில்லை.''

''என்ன சொல்றே, இப்ப வெளியே போடீன்னு சொல்றியா.''

''இல்லை. இங்க உட்கார்ந்து எனக்கு சிசுருஷை பண்ண முடியுமா. செய். இல்லைன்னா கிளம்பு. நானே என் பாரத்தைத் தாங்கிக்கறேன். நான் அங்கே வரமுடியாது.''

''ஏண்டி.''

''எதுக்குக் கூட அரைலிட்டர் பால், எதுக்குக் கால் கிலோ வெண்ணெய்னு கணக்குப் பார்ப்பார் அப்பா."

''இதுக்குப் பார்ப்பாளாடி."

''எனக்குப் பார்க்கவும், என்னைச் சீராட்டவும் அந்தக் குழந்தைகளை வெறுப்பா, எனக்கு மட்டும் நாலு வேளை காபி தனியா போட்டுக்க முடியாது. அது பாவம்."

''அதனால..."

''முடிஞ்சா இங்க இரு. இல்லைன்னா உன் வீட்டைப் பார்க்க வெய்யில் தாழக் கிளம்பு."

அம்மா அழுதபடி கிளம்பிப் போனாள். தங்கைகள் மறுநாள் வந்தனர். ஆளுக்கொரு பக்கமாய் அக்காவை அணைத்துக் கொண்டனர்.

''கஷ்டம்தான். வத்சலா. அதுக்காக வரமாட்டேன்னு சொல்லாதே. உனக்காக நாங்க எதுவும் தாங்கிப்போம். எத்தனை செலவானாலும் ஏத்துப்போம்."

''இல்லை பத்மா... உனக்குப் புரியலை, அப்பா கஷ்டப்பட்டா, நீங்க கஷ்டப்பட்டா என் மனசு வேதனைப்படும். மனசு வேதனையோட மூத்தப் பிள்ளையை நான் தாங்க வேண்டாம். உண்மையிலேயே உதவி பண்ணணும்கற எண்ணம் இருந்தா ஒண்ணு செய். அம்மாவை அனுப்பி வை. எனக்கு முடியலை. கிறுகிறுன்னு தள்றது. அங்கே சமையல் மத்தது எல்லாம் நீங்க பார்த்துண்டா அம்மா நிம்மதியா என்கூட இருப்பா."

''பிரிச்சுப் பேசறியே வத்சலா."

''இல்லை பத்மா. நீங்க நாலு பேரும் என்னால வதை படக்கூடாதுன்னு பேசறேன். காலேஜ் லீவு நாள்ல வாங்கோ எல்லாரும். உட்கார்ந்து அரட்டை அடிப்போம். பாடுவோம். சாப்பிட்டுட்டுக் கிளம்புங்கோ."

''மொத்தமா நாங்க வந்தா உனக்குச் செலவு இல்லையா."

''வாரத்துக்கு ஒரு வேளை சாப்பாடு போட்டா நான் ஒண்ணும் குறைஞ்சு போயிட மாட்டேன். அதுக்குக் கடவுள் கொடுத்திருக்கார்."

''எங்க மேல கோவமில்லையே."

''ச்சீ."

''இதெல்லாம் பார்க்கறச்சே கல்யாணமே வேண்டாம்னு தோண்றது." ராதா அலுத்துக் கொண்டாள். பெரிய பணக்காரக் குடும்பப் பொறுப்பு ஏற்ற பத்மினியைப் போல.

''அசடு. நல்ல புருஷனா கிடைச்சுட்டா அதைவிட சந்தோஷம் ஏதுமில்லை தெரியுமா."

''அதிர்ஷ்டம் வேணும்கறியா."

''அதிர்ஷ்டம் தான்.''

''அத்திம்பேர் கோச்சுக்க மாட்டாரா.''

''ஒரு நாள்கூடக் கிடையாது.''

''நீ கோச்சுப்பியா அவரை.''

''விரட்டு விரட்டுன்னு விரட்டுவேன்.''

''எனக்குப் பாக்கணுமேடி.''

''இன்னிக்குத் துணி உலர்த்தாமலேயே போயிட்டார் ஆபீஸுக்கு. எப்படி டோஸ் விடறேன் பாரேன். நான் அந்த விஷயத்தில் பெண்ணுருவ சுபாஷ் சந்திரபோஸ்.''

''ச்சீ, வேணாம். நான் உலர்த்திடறேன். மாடிக்கு எப்படிப் போகணும்.''

மூன்று பேரும் மாடிக்குப் போய் துணி உலர்த்தினார்கள். ''ஏய் வத்சலா, ஒண்ணு கேட்கணும் உன்கிட்ட. ரெண்டு வருஷம் பிள்ளையே பெத்துக்க மாட்டேன்னியே, இப்ப எப்படி ஒண்ணரை வருஷத்திலேயே...''

''அதுவா, ஒரு மடத்தனம் பண்ணினேன். சிவாஜி படம் நைட்ஷோ போயிட்டு வந்தோம். மறுநாள் காந்தி ஜெயந்தி லீவு. ஊர்ப்பட்ட அரட்டை அடிச்சு விடிகாலம்பர மூணு மணிக்குத் தூங்கினோம். எனக்குக் கண்ணைச் சுழட்டிண்டு நல்ல தூக்கம். இவர் என்னமோ வம்பு பண்றார்னு தெரிஞ்சுது. ஆனா முழிச்சுக்க முடியலை. வேண்டாம். உங்களுக்கு இன்னும் கல்யாணம் ஆகலை. அதெல்லாம் சொல்லமாட்டேன்.''

''ப்ளீஸ்... ப்ளீஸ் வச்சலா.''

வத்சலா கிசுகிசுப்பாய் அனுபவம் சொன்னாள், கன்னங்களும் காது மடல்களும் சிவக்கத் தங்கைகள் பற்களால் உதட்டைக் அழுத்திக் கடித்து வாய் பொத்திச் சிரித்தனர்.

''யப்பா... கேட்கறப்பவே செமை கிக்கு வருதில்லை.'' ஒருவருக்கொருவர் கண்சிமிட்டிப் பேசிக்கொண்டனர்.

''ஆ... அது எப்படி.''

''அப்படியாகும்டீ.''

''நான் நம்ப மாட்டேன்.''

''காட் ப்ராமிஸ், நாள் தள்ளிப் போறதேன்னு டாக்டர் கிட்டப் போனேன். அடுத்த வாரம் வரைக்கும் பாருன்னார், அவர். மறுவாரம் போனா, 'ஆமா நாப்பது நாள். ஒண்ணும் பண்ணாதே தலைச்சன் தானே'ன்னுட்டார். இவர் கிட்டேயும் சொன்னேன். இவரும் ஒண்ணும் பண்ணாதேன்னுட்டார். மறுமாசம் அம்மாவுக்கு எழுதினேன். இது தோர்ட் மன்த்.''

''விட்டேத்தியா லெட்டர்ல எழுதினது கஷ்டமாயிடித்து வத்சலா.''

''வந்து நின்னா இது வேறயான்னு அப்பா பேசுவார்.''

"அப்படித் தப்பா நினைக்காதே வத்சலா."

"முடியாதபோது, எதுக்குத் தொந்தரவு பண்ணனும். போ, உன் வீட்டுக்குன்னு இவர் துரத்தினா வேறவழியில்லை. வயத்தைச் சரிச்சுண்டு வந்து நிக்கணும். இவர் போக வேண்டாம் இங்கேயே இருங்கிறார். சரின்னு தீர்மானம் பண்ணிட்டேன்."

"உனக்கு என்ன வேணும் இப்ப."

"அம்மா வேணும்."

"சரி. அப்புறம்."

"வளைகாப்பு முடிஞ்சா செய்யுங்க. சீமந்தம் கிளியனூர்ல செய்யமாட்டா. எனக்குத் தெரியும். அப்பாக்கிட்ட பேசி இரண்டும் சேர்த்து நாம பண்ணிடலாம். பத்மா."

ராதா பேசினாள். "செய்யுங்கோ. ஆனா அந்தச் செலவு பூரா நான் ஏத்துக்கறேன்."

"எதுக்கு இருபத்தஞ்சு கண்ணாடி வளையல். புதுப்புடவை ரவிக்கை நாங்க செய்ய மாட்டோமா."

"உங்க பங்குக்கு அந்தச் செலவு போறும். டாக்டர் சொன்னதும் இவர் பிராவிடன்ட் ஃபண்ட் லோன் போட்டுத் தங்க வளையல் ஆர்டர் பண்ணிட்டார். நானூறு ரூபா தரேன், என் சந்தோஷத்துக்கு ரெண்டு பேருமா வளைகாப்பு சீமந்தத்தை நம்ம வீட்ல பண்ணுங்க. வைத்தியச் செலவு, இருபது இலை சாப்பாடு."

"நானூறு ரூபா எதேஷ்டம்."

"வளைகாப்பு ஆன கையோட இங்க வந்துடுவேன்."

"ஏன் வத்சலா..."

"இதுதான் சௌகர்யம். காத்து வசதி. டாக்டர் வீடு கிட்ட. இவரும் கூட இருப்பார்ங்கிற நம்பிக்கை."

"ச்சீ... காசில்லை என் கிட்டே. இந்த அத்திம்பேருக்கு உட்கார வச்சு சொர்ணாபிஷேகம் பண்ணலாம்."

"அக்காவுக்கு உதவி செய்யணும்னு மனசிருந்தா போதும். அம்மாவை உதவிக்கு அனுப்பினாப் போதும்."

அம்மா இருந்தாள். ஒரு வேலை கூட செய்யவிடாமல் உள்ளங்கையில் தாங்கினாள். உணக்கையாய் சமைத்துப் போட்டாள். ஏழாம் மாதம் தங்கைகள் வளைகாப்புக்கு ஏற்பாடு செய்தனர்.

கிளியனூரிலிருந்து மாமனார் வந்திருந்து மாலையே திரும்பிவிட்டார். நூற்றியோரு ரூபாய் ஓதியிட்டார்.

அந்த நூறு ரூபாயை வளைகாப்பு நடத்திய இரண்டு மைத்துனிகளுக்குக் கூடக் காசு போட்டு இரண்டு புடவைகள் வாங்கி ராஜாமணி பரிசளித்தான்.

அந்த எதிர்பாராத பரிசளிப்பில் நெகிழ்ந்து அக்காவையும் அத்திம்பேரையும் நமஸ்கரித்து அழுத குழந்தைகளைக் கண்துடைத்துத் தேற்றினாள்.

காசு முக்கியமே இல்லை; மனுஷர்கள் முக்கியம். இப்படி ஓடி ஓடி உதவி செய்கிற மனுஷர்கள் முக்கியம்.

ஆனால் அத்திம்பேர் என்கிற அன்னிய புருஷனிடம் புடவை வாங்கிக் கூச்சத்தோடு கட்டிக் கொண்ட அந்தப் பெண்களின் உள்மனசில் ஒன்று பதிந்தது.

'காசும் முக்கியம்.'

இடுப்பு வலி எடுத்து வத்சலா நர்ஸிங் ஹோமில் அட்மிட் ஆனாள். பக்கத்து வீட்டு மாமிகள் உட்பட வத்சலா வீடு முழுக்க நர்ஸிங்ஹோம் வாசலில் விரல் பின்னிக் கிடந்தது. பயமில்லை, பயமில்லை என்று சொல்லிக் கொண்டிருந்த டாக்டர் கடைசி நிமிடத்தில் சிசேரியன் என்று கையெழுத்து வாங்கிப் போனார்.

தலை நிறைய முடியும், செவேல் என்கிற உடம்பும், விறிட்ட கத்தலுமாய் ஏழரை பவுண்ட் எடையுள்ள பிள்ளை ராஜாமணிக்குப் பிறந்தான்.

காசுதான் ஒற்றைக்கு இரட்டையாயிற்று. அடுத்த ஒரு வருஷம் பூ மாதிரி மனைவியை வைத்துக் கொள்ளக் கட்டளையாயிற்று. குழந்தை வெங்கடரமணன் பிறந்த மறுநாள் பத்மா பி.காம்., முதல் வகுப்பில் பாஸ் செய்த செய்தி வந்தது. ராஜாமணியின் மாமியார் வீடு என்றுமில்லாத சந்தோஷம் கொண்டது.

## 4

அம்மா பிள்ளைப் பேறுக்குப் பிறகும் வத்சலாவின் வீட்டோடு இருந்தாள். நாயாய் உழைத்தாள். வத்சலாவுக்குப் பத்தியச் சோறும், குழந்தையின் துணிகள் முதல் மாப்பிள்ளை ஜட்டிவரை குமுக்கித் தோய்ப்பதும், வாரத்துக்கு இரண்டு முறை மொத்த வீட்டையும் அலம்பித் துடைப்பதும் சின்ன முணுமுணுப்புக்கூட இல்லாமல் செய்தாள்.

''ரொம்ப சிரமம் உங்களுக்கு'' ஒரு விட்டேத்தியான ஞாயிற்றுக்கிழமை எதிரே உட்கார மறுத்துப் பேசிக் கொண்டிருக்கிற மாமியிடம் உபசாரமாய் ராஜாமணி சொன்னாள்.

''கொடுத்து வச்சிருக்கணுமே, பொண்ணுக்குப் பிரசவம் பார்க்கவும் பேரனுக்கு அலம்பி விடவும்.''

''என் வேட்டி, சட்டையையாவது நானே தோச்சுப்பேன். அதுவும் கூடாதுங்கறேள்.''

''பிரம்மச்சாரியாயிருந்தா தோச்சுக்க வேண்டியதுதான். கல்யாணத்தைப் பண்ணிட்டுத் தன் வேட்டியைத் தானே தோச்சுப்பானேன்."

''வத்சலா என் துணியைத் தோய்ப்பா. நான் அவ புடவையை உலத்துவேன். இங்க முன்ன பின்ன நடக்கும். உங்களைப் போய்..."

''இதுவும் கொடுப்பினைதான்."

''மாப்பிள்ளைக்குத் தோச்சுப் போடறதா நான் கேள்விப்பட்டதில்லை."

''பொண்ணுக்கு உடம்பு சரியில்லை. வயிறு கிழிச்சுப் பிள்ளை எடுத்திருக்கா. மாப்பிள்ளை புரிஞ்சுண்டு வராண்டால படுத்துகிறதைப் பெத்தவா பாத்தா மனசு பூஞ்சையாயிடும். வேட்டியும் தோச்சுப் போடலாம். செருப்பும் துடைச்சு வைக்கலாம்."

''எம் பொண்டாட்டி மேலே எனக்கு அக்கறை. நாளைக்கு நல்லபடி நடமாடணுமேன்னு கவலை."

''அந்தப் பொறுமைக்குத் தான் நமஸ்காரம் பண்ணத் தோணறது. கைகூப்பினாத்தானா. வேட்டி தோச்சு உலத்துறதுகூட அது மாதிரி தான்."

''இதுல ஒரு கெடுதலும் இருக்கு. நாளைக்கு என் பொண்டாட்டி சமையல் பிடிக்காம போயிடுமோன்னு..."

''நான் எடுத்து வச்சுட்டுப் பரிமாறாமப் போயிடறதைச் சொல்றாப்பல இருக்கு..."

ராஜாமணி சிரித்தான். "இவளுக்கு சமையல் மறந்துடும் போல இருக்கே."

"ச்சு... ஒன்றரை வருஷம் நாக்கைச் சப்புக் கொட்டிண்டு திங்கலியா." வத்சலா இடைமறித்தாள்.

"அவ கையால சாப்பிடணும்னு தோணித்துன்னா சரி, நான் சமைக்கலை."

''அடடா, பாராட்டாச் சொன்னேன். எதிர்ப்பதமா எடுத்துக்கிறேளே."

பிள்ளை உஷாவைப்போல் ஓட ஆரம்பிக்கிற போது அம்மா விடை பெற்றுக்கொண்டு போனாள். பத்மாவுக்கு வீடும், ஆபீஸும் சமாளிக்க முடியவில்லை என்று அக்கம் பக்கம் சமாதானம் சொன்னாள். பத்மாவுக்கு ஒரு கம்பெனியில் நானூறு ரூபாய் சம்பளத்தில் ஸ்டெனோ வேலை கிடைத்திருந்தது. சுமாராய் இருக்கிற அக்கா புடவைகள் இரண்டு எடுத்துக் கொண்டு போனாள்.

''பழசு தரேனேன்னு வெட்கமாயிருக்குடி." வத்சலா சொன்னாள்.

''அம்மாவுக்குக் கொடு புதுசு. அவதான் உனக்கு

உழைச்சிருக்கா. நாங்க என்ன செய்தோம். இது ரெண்டுதான் என்கிட்ட இப்ப இருக்கிற நல்ல புடவை. இதுக்கே ரொம்ப... என்ன சொல்றது..."

''ஒரு தடவை கட்டின ஆர்கண்டி இருக்கு. எடுத்துக்கறியா."

''வேண்டாம். கொஞ்சம் பழசாச்சுன்னா ராதாவுக்குக் கொடு. அதுக்குப் புடவையே இல்லை."

மாமியார் விடை பெற்ற அன்று ராஜாமணி உள்ளேயே படுக்கை விரித்துக் கொண்டான்.

''எப்ப மாமியார்க்காரி ஒழிவான்னு காத்துண்டிருந்தாப் போல இருக்கு."

''யார் சொன்னா, மாமியாரைச் சமையல் ரூம்ல படுத்துக்கச் சொல்லிட்டு இங்க வந்து படுத்தா யார் தடுக்க முடியும்"

சமையலறைக்குக் கதவு கிடையாது.

''அது சரி, எட்டியா பார்க்கப் போறா எங்க மாமியார்."

''காது கேட்காதா."

''கேட்டுட்டுப் போறது. தெருவுல போறவனா வந்து படுக்கறான் பொண்ணுகிட்டே. கொண்டவன்தானே..."

''நல்லபடியா மானத்தைக் காப்பாத்தினேளே, ரொம்ப தாங்ஸ்."

''வார்த்தையா சொல்லாதடி என் கண்ணு. உங்கம்மா சமர்த்துல பாதிகூட இல்லையே உன்கிட்ட."

''என்னது எங்கம்மா சமர்த்து."

''மாப்பிள்ளைக்குக் கை கூப்பியா நமஸ்காரம் பண்ண முடியும். வேட்டி, சட்டைத் தோச்சுப் போடறேன்னா உங்கம்மா. நீ என்னமோ எதிர்க்க உட்கார்ந்து இழுத்துப் போத்திண்டு தாங்ஸ்ங்கிறே."

''வெறி பொறி பறக்கறது போல இருக்கு..."

''ஏன் உங்களுக்கு விட்டுப் போயிடுத்தாக்கும்."

''அப்படியில்லை. ஐயோ பாவமே, இத்தனை மாசம் வராண்டால சமர்த்தா தூங்கித்தேங்கற இரக்கம் இருக்கு."

''எவ இரக்கமும் தேவையில்லை. காசை விட்டெறிஞ்சா ஒண்ணுக்கு நாலு கழுதை."

''யார் தடுத்தா..."

''ஒரு தர்மம். மெல்லிசா ஒரு நூல் கயிறு மாதிரி ஒரு தர்மம் தடுக்கறது. நல்ல பொண்டாட்டி அமையாம அமைஞ்சாலும் புள்ளை பொறக்காம பொறந்தாலும் சீராட்ட ஆள் இல்லாம ஆயிரம் லட்சம் ஆம்பளைகள் உண்டு. எந்த ஜென்மத்தில யார் பண்ணின புண்ணியமோ இத்தனையும் எனக்குக் கிடைச்சிருக்கு. இதை ஒரு வேகத்துக்கு உதறிட்டுப்

பாபத்தைப் பண்ணுவானேன்னு எண்ணம். அந்தப் பாபம் என்னையும் என் குழந்தையையும் தொடரக் கூடாதோன்னு ஒரு பயம்."

"நெஜம்மாதானா."

"வேற எது தடுக்கும் சொல்லு. நம்ம மனசுதான் கோட்டை. நம்ம புத்திதான் காவல். நம்ம தெளிவுதான் வெளிச்சம். நல்லா இருக்கணும்னு உண்மையா ஆசைப்படறவன் தப்பு பண்ணமாட்டான் வத்சலா."

"இங்கே வாங்களேன்."

"எதுக்கு..."

"வாங்களேன்."

"ம்ம்... சொல்லு."

"வத்சலா புடவைத் தலைப்பை நெகிழ்த்தினாள். ரவிக்கை பட்டனைத் தளர்த்தினாள். அவன் கைகளை எடுத்து மார்பில் பதித்துக் கொண்டாள். அவன் மடியில் படுத்து வெறியோடு முத்தமிட்டாள்.

"உங்களை வெறின்னு சொன்னேனில்லை நான்."

"சொன்னே."

"எனக்கு வெறியாயிருக்கு."

"ம்ஹூம்."

"கொன்னு போடுங்களேன் என்னை."

"வெறுமனே உன்னைப் பார்த்துண்டிருக்கணும் போல இருக்கு எனக்கு."

"பாருங்களேன், காதல் மன்னன் கமலைப் போல..."

"இவ்வளவு பெரிய தழும்பா வயித்துல. இத்தனை சுருக்கம் போட்டிருக்கே ஏன்."

"புள்ளை பெத்த வயிறில்லையா, சிசேரியன் தழும்பு. பெல்ட் போட்டு இறுக்கியும் மேடு கரையலை. இன்னும் இருக்கு. காலைத் தூக்கி என்னவோ எக்ஸர்ஸைஸ் பண்ணணுமாம். போர். அந்த உடம்பே போச்சு இல்லைன்னா எனக்கு..."

"இப்பதான் அழகாப் படறது."

"கொஞ்சம் குண்டாயிட்டேனா."

"திமிசுக் கட்டை மாதிரி இருக்கே."

"நான் அழகான திமிசுக் கட்டையா."

"திமிசுக் கட்டையும் ஓர் அழகுதான்."

"பேச்சு, பேச்சு, வெல்லப் பாகாப் பேச்சு. கிள்ளி எடுத்துட்றேன் பார் உதட்டை."

"வத்சலா வத்சலா... வத்ச்.. வத்ச்..." திருகப்பட்ட உதடுகளின் வழியே எச்சமும் உளறலுமாய்த் தவித்தான்.

'பார்த்தால் பசி தீரும் "

பருவத்தில் மெருகேறும்
தொட்டாலும் கை மணக்கும்
தொட்ட இடம் பூ மணக்கும்.'

இரவு ரேடியோ மேலும் கிறக்கம் தந்தது.

புருஷனும் மனைவியும் லஜ்ஜையின்றி ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள். தொட்டுத் தொட்டு ரசித்துக் கொண்டிருந்தார்கள்.

'அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம் செறிதோறும் சேயிழை மாட்டு.'

தத்துவங்களை அறிய அறிய இவ்வளவு காலம் இத்தனை அறியாமையா என்னுள் இருந்தது என்று வியப்பெழுதலைப்போல செந்நிற அணிகலன்களை அணிந்த இவளோடு கூடும்போதெல்லாம் இத்தனை இன்பமா இவளிடம் இருக்கிறது என்ற வியப்பு வருகிறது.

புருஷனின் வலிவு மிகுந்த் பெரிய புஜங்களுக்குள் தன்னைப் பொருத்திக் கொண்டு வத்சலா அவன் தலையைக் கோதிக் கொடுத்தாள்.

யார் சொன்னது ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள் என்று. இது பரத்தை உறவுக்கு வேண்டுமானால் பொருத்தமாய் இருக்கலாம். பத்தினியோடு கூடிக் காமம் கரைப்பதற்கு வயசுண்டோ. வலிவு காட்ட மட்டுமா காமம், வசமிழத்தலில்லையா.

கூச்சமும் நாணமும் அழிந்து, கொண்டவனும் கொண்டவளும் இதற்கே பிறந்ததெனக் குறிப்பால் குறிப்பறிந்து கூடுதல் அல்லவோ உண்மையான காமம். வெறும் ஆட்டமும் அயர்ச்சியுமா சுகம். சுருதி சேர்ப்பதுபோல் சுகம் ஒன்று உண்டா. தோல் வார் இழுத்துத் திருப்பித் திருப்பி மத்தளத்தைத் தட்டித் தட்டிச் சுருதி சேர்ப்பது போல இனிய நேரம் வேறு ஏதும் தாள வித்வானுக்கு உண்டோ. ரவை சேர்த்து, தொப்பியில் பொருத்தி இடது பக்கம் உள்ளங்கை மேடு அழுத்தி 'ணங்' என்று ஒற்றை விரலால் தட்டி 'தகிட தத்ததும்' என்று காப்புக் கொடுத்து நிறுத்தின பரவசம் வேறெங்கும் வருமா.

'சுக சுகாமு மிருதங்க தாளமு.'

வெறும் தோள் கருவியா மிருதங்கம். ரத்தமும், மலமும், சீழும், சளியும் மட்டும் கொண்ட மானுட உடம்பு.

சொக்க வைக்கவில்லையா.

சுருதி செத்துப் போகையில்தான் சகலமும் நாராசமாகும்.

விட்டுக்கொடு, விட்டுக்கொடு, வேணும் என்பது கிடைக்கும். இதுதானே குடும்பத்தின் சுருதி.

'அப்பா பக்கம் வந்தா
அம்மா முத்தம் தந்தா'

ரேடியோவில் மழலை பாடிற்று. மனைவி ஒருக்களித்துப் படர்ந்தபடி வலக்கையால் அவள் அருகே தூங்கும் குழந்தையை ராஜாமணி வருடினான்.

"ஒரு நாள் இரவில் தனியாக
அருகே நடந்தாள் அன்னை
கேட்டேன் கொடுத்தாள் சுவையாக
எடுத்தேன் அணைத்தேன் உன்னை."

வாய்விட்டு ரேடியோவோடு பாடினான். பிள்ளையை வாஞ்சையுடன் வருடும் புருஷனை வத்சலா வாரிக் கொள்ள வழங்கினாள்.

# 5

**வா**ழ்க்கை லயம் குழந்தை பிறந்த பிறகு வேகமாகி விடுகிறது. மெத்தனம் குறைந்து கரிசனம் அதிகமாகிறது. குழந்தை தன் உலகத்தை விட்டுவிட்டு மெல்ல மெல்லப் பெற்றோர் உலகம் அறிய ஆரம்பிக்கும்போது அவன் ஒவ்வொரு செயலும் பெரு வியப்பை ஏற்படுத்துகிறது.

வாசலில் நூறு சைக்கிள் போகும். குழந்தை ரமணனுக்கு அப்பாவின் சைக்கிள் மணி துல்லியமாய் அடையாளம் தெரியும்.

"அதெப்படித் தான் கண்டுபிடிப்பானோ உங்க சைக்கிள் மணி சத்தத்தை, பாம்புச் செவி." வத்சலா கொண்டாடுவாள்.

ஆபீஸ் விட்டு வந்ததும் பிள்ளையை வாரிக் கொண்டு உட்கார்ந்தால் இரவுச் சோறு வரை அப்பனும் பிள்ளையும் ஆயிரம் நாடகம் ஆடுவார்கள். அவர்களுக்குக் குளியலறைதான் முக்கியமான கூத்து மேடை.

"மீனுக்குப் பொறந்த பய்லே, குளிச்சது போதும் வாடா." ராஜாமணி வலுக்கட்டாயமாகக் குழந்தையை எடுத்து வந்து துவட்டி ஜட்டி தேட அலமாரியைக் குடைகையில் மறுபடி பிள்ளை தண்ணீருக்கு ஓடிவிடுவான்.

"ஜலதோஷம் பிடிக்கும். ஓடி வாடா. என் ராஜா." கெஞ்சிக் கொஞ்சிப் பிள்ளையைத் தாயும் தகப்பனும் மறுபடி துவட்டுவார்கள். அதென்னவோ குழாயடியும் தண்ணீர் பக்கெட்டும்தான் முதல் விளையாட்டு விஷயமாய் இருந்தன. சைக்கிள் சுற்றும், குரங்கு பொம்மை தரையில் ஓடும். அது தண்ணீரில் ஓட வேண்டும் என்று பிள்ளை விரும்புவான். சாப்பிட்டுக் கையலம்பக் குழாயடிக்குப் போனால் போதும், இடுப்புயர பக்கெட்டில் சோற்றுக் கை மொத்தமும் சளசளப்பும். சுளீரென்று இரண்டு அடிகூட வைத்துப் பார்த்துவிட்டாள். பையன் நண்டு ஜாதியாய் இருந்தான்.

மூக்கு மடை திறந்தது போல ஒழுகிக் கொண்டே யிருக்கும். இரவு நெஞ்சு இரைச்சல் ஹால் முழுவதும் கேட்டும். மூக்கில் மூச்சுவிட முடியாமல் 'ஹா' என்று வாயைத் திறந்து தூங்கும் குழந்தை பார்க்கப் பரிதாபமாக இருக்கும்.

''மார்சளி போகவே மாட்டேங்கறதே டாக்டர்.''

மாற்றி மாற்றி மருந்து கொடுத்தும் பிரயோசனமில்லை. சளி நிரந்தரம். முணுக்கென்றால் ஜுரம் வந்துவிடும்.

வாரத்துக்கு இரண்டு முறை டாக்டர், மருந்துக் கடையில் கணக்கு. புரதச் சத்து நிறைந்த பவுடர் பால். பிள்ளை சீராட்டலுக்கே சம்பாதிக்கிற பாதிப்பணம் செலவாயிற்று.

இருபதாம் தேதி விழி பிதுங்கிற்று.

''நாலு ஓவர்டைம் பண்றேன். எப்படி திருப்பிக் காசு கேட்கற வத்சலா.''

''விஷம் மாதிரி விலைவாசி ஏறிக்கிடக்கு. முந்நூறு ரூபா மளிகை சாமான் வாங்கின இடத்துல நானூத்திப் பத்து ரூபா ஆறது. பத்துப்பைசா நான் வீண் செலவு செய்யலை.''

''தெரியறது. என்கிட்ட காசில்லையே.''

''நான் யார்கிட்டக் கேட்பேன். எங்கம்மாகிட்ட நூறு ரூபா கடனாக் கேட்கட்டுமா. அடுத்த மாசம் அடைச்சிடுவேளா.''

''வேணாம் வத்சலா. நான் ஆபீஸிலேர்ந்து யார் கிட்டயாவது கேட்டு வாங்கிண்டு வரேன்.''

''கிடைக்கலைன்னா.''

''கிடைக்கும்.''

''எதுக்கும் கேட்டு வைக்கட்டுமா அம்மாகிட்ட.''

''பாவம், அவாளே சிரமப்படறா. பெரிய குடும்பம்.''

''ரமணாவுக்குன்னு கேட்டா மாட்டேன்னு சொல்லமாட்டா.''

''அதுக்காகக் கேட்கறதா. ஆபீஸ்ல கடன் கொடுக்கறவன் ஒருத்தன் இருக்கான். ஆனா..''

''ஆனா என்ன.''

''வட்டி புடிச்சுண்டு கொடுப்பான். நானே திட்டியிருக்கேன் அவனை லேவாதேவி பண்றியேன்னு.''

''வட்டிக்குக் கடனா. கைமாத்தாக் கேட்டா யாரும் தரமாட்டாளா.''

''தரலாம். இதுவரை கேட்டதில்லை. சாயந்திரம் கேட்டுச் சொல்றேன்.''

''இன்னிக்கு எப்படியும் மருந்து வேணும். டாக்டர் கிட்ட போகணும்.''

''போலாம்.''

''புடுங்கறேனேன்னு நினைக்காதீங்கோ. காசோட

வாங்கோ."

"ச்சே ச்சே..., எனக்குப் புரியறது வத்சலா. என் சம்பளம் போறலை. நூறு ரூபா விலைவாசி வருஷத்துக்கு உயர்ந்துடறது. இருபது ரூபா தானே இன்க்ரிமெண்ட். எதையாவது குறைக்கணும்."

பிற்பகல் அம்மா வீட்டுக்குக் குழந்தையோடு பஸ் ஏறி வத்சலா போனாள். ஒருவேளை ராஜாமணி காசு கொண்டு வராவிட்டால் இருபது ரூபாயாவது கொடும்மா என்று கேட்கலாம் என்று போனாள். கேட்டாள்.

"என்கிட்ட ஏதுடி இருபது ரூபா, கொஞ்சம் இரு. எட்டணா காசு இருக்கா, பத்மாக்கு போன் பண்ணி ஆபீஸ்ல கடன் வாங்கச் சொல்றேன்."

"அப்பாகிட்ட இருக்காதா."

"உன் நகைக் கடனே இன்னும் அடையல தெரியுமா. துணிக் கடன் போன மாசம் அடைஞ்சது. ஆயிரத்து முன்னூறு ரூபா சம்பளத்துல அறநூறுதான் வர்றது கைக்கு."

ஐம்பது ரூபாய் சாயந்திரம் வத்சலா வீட்டுக்கு வந்து தருவதாகச் சொன்னாளாம்.

பத்மா, ரமணனுக்கு உடம்பு என்றதும் பதறிவிட்டாளாம்.

மாலையில் பத்மா முதலில் வந்தாள். பர்ஸ் பிரித்து ஐம்பது ரூபாய் கொடுத்தாள்.

"ஏதுடி பர்ஸ், நன்னாயிருக்கே."

"எழுவது ரூபா." அதில், ஓர் மாதவித்தனமான தலையசைப்பு.

"விலை ஜாஸ்தியில்லை."

"வேண்டியிருக்கே வத்சலா."

"ரொம்ப கஷ்டப்பட்டியா இந்த அம்பது ரூபாய்க்கு."

"சீட்டுத் தள்ளி எடுத்தேன். எடுக்கவே கூடாது. சேமிப்பா இருக்கணும்னு நினைச்ச விஷயம்."

"எவ்வளவு ரூபா சீட்டு."

"மாசம் அம்பது ரூபா. தள்ளுச் சீட்டு. சீட்டைத் தொடாம நானூத்தி அம்பது கட்டினாப்போறும். அறநூறு ரூபா சுளையா வந்துரும்."

"எவ்வளவு தள்ளினே."

"நூத்தி இருபது தள்ளினேன்."

"அப்ப நூறு ரூபாயா கொடேன். வீட்டுச் செலவு வேற இருக்கு."

"எனக்கு வேணும்டீ. பெட்டிகோட் எல்லாம் கிழிச்சலா இருக்கு. வேற சிலது வாங்கணும்."

''இப்ப சாதா பாடிஸ் போடறதில்லையா... ப்ராவா தொங்கறதே நம்ம வீட்ல."

''ப்ராதான் வசதி."

''சின்னவளும் ப்ராதானா."

''ம்ம்..."

வத்சலா பேசாதிருந்துவிட்டாள்.

''சாப்பிட்டுப் போயேன் பத்மா. அவரும் வந்துடுவார்."

''வேண்டாம் வத்சலா, நான் கிளம்பறேன்."

''குங்குமம் எடுத்துக்கோ. நூறு ரூபாயாத் தந்துட்டுப் போலாம். நான் திருப்பத் தரமாட்டேன்னு நினைச்சுண்டு மாட்டேங்கறியா."

''இருந்தா வஞ்சனையா. இல்லை வத்சலா."

''நான் ப்ரா வாங்கி மாட்டிக்கவா கேட்கறேன், குழந்தை மருந்துக்குத்தானே."

பத்மாவுக்குக் கடும் கோபம் வந்தது. ''இதை நான் கடனாத் தரலை வத்சலா. குழந்தைக்குன்னு கொடுத்தேன். அடாவடியாப் பேசாதே."

''கெஞ்சித்தானே கேட்கிறேன். தொட்டில் போடறோம், தங்கத்துல அரைஞாண் பண்ணுன்னு கேட்டா அடாவடி. நெஞ்சுக் கூடு இழுக்கிறது. சளி குறைய மருந்து வாங்கணும்னா அடாவடியா. இதுகூட சித்திக்காரி செய்யப்படாதா."

''எவ்வளவு வேணும் உனக்கு."

''நூறு ரூாய். போன மாசமே மருந்துக்கடைக்காரனுக்குக் கொடுக்கலை."

''சரி, இந்தா."

''கோவமாடி."

''இல்லை."

''அடுத்த மாசம் நிச்சயமா டாண்ணு இரண்டாம் தேதி வீடு தேடி வந்து குடுத்துருவேன்."

''முடிஞ்சாக் குடு."

''நூறு ரூபாயுமா."

''சரி. அம்பது குடு."

''வத்சலா, இங்க வா. எதுக்கு பத்மாக்கிட்ட காசு கேட்டே. நான் கொண்டு வரேன்னு சொன்னேனில்லையா." உள்ளே நுழைந்ததும் ராஜாமணி குரல் கொடுத்தான்.

''வழில பாத்தேளா."

''பஸ் ஸ்டாண்டுல நின்னுண்டிருந்தா. என்ன இவ்வளவு தூரம்னேன். பொலபொலன்னு அழுதுட்டா."

"அப்பா, மாய்மாலம்."

"ச்சீ... தத்தி. ஐநூறு ரூபா சம்பளம் வாங்கறா. அவகிட்ட போய்க் காசு கடன் கேட்டுண்டு.."

"ப்ரா வாங்க நூத்தி இருபது ரூபா சீட்டுத் தள்ளி எடுத்திருக்கா. அதுலதான் அம்பது ரூபா கடனாக் கேட்டேன்."

"நூறு ரூபா கொடுத்தாளாமே."

"அம்பது அவளாக் கொடுத்தது. இன்னொரு அம்பது நான் கடன் கேட்டது."

"அசிங்கம்."

"மஞ்சப் பொடி இல்லை. தனியா இல்லை. ரவை இல்லை."

"அதுக்குத்தான் நான் இருக்கேனே தடி மாடு மாதிரி. என்னைக் கேட்கறது. கொண்டு வந்து தரேன். கவலைப்படாதேன்னு சொல்லிட்டுத்தானே போனேன்."

"கடன்தானே வாங்கப் போனேன். எங்கயோ வட்டிக்கா வாங்கினேன். கூடப் பொறந்த தங்கை கிட்ட கேட்டேன். என்ன தப்பு."

"ச்சீ, சின்னப் பொண்ணுடி அவ. அதுவே சாப்பாட்டுக்குக் கஷ்டப்படற குடும்பம்."

"இருவத்தி ரெண்டு வயசாறது. என்ன சின்ன பொண்ணு... அப்பா நகைக் கடனைத் தவிர மத்த எல்லாக் கடனையும் அடைச்சுட்டாராம்."

"அதனால..."

"கஷ்டப்பட்டுப் பொண் குழந்தை சம்பாதிக்கிறது."

"அறநூறு ரூபா சீட்டுக் காசு பெரிசா. பெட்டிக்கோட் வாங்கப் போறேங்கறா. அதனால் கேட்டேன்."

"அபத்தமா பேசாதே, வத்சலா. சொந்தக்காராக் கிட்ட கடன் கேட்கறது தப்பு."

"நாளைக்கே கொண்டு போய்க் குடுத்துடறேன். உங்களுக்கு நூறு ரூபாய் கிடைச்சுதா."

"கிடைச்சுது. வட்டி போக எண்பத்து நாலு ரூபாய் கொடுத்தான்."

"இது போறாதே மாச மொத்தத்துக்கும்."

"ம்ம்."

"அடுத்த மாசமே பத்மா காசைக் கொடுத்துக்கலாமா."

"ம்ம்."

"இனிமே போனஸ் காசுதான் பெரிய காசா வரும் இல்லையா."

"வரபோதுதான் நிச்சயம்."

"ஏன்."

"இப்பவே ஆபீஸ்ல என்னவோ சண்டை புகையறது

அதுக்கு."

"ஏன் கவலையா இருக்கேள், காசு இல்லைன்னா."

"அது மட்டுமில்லை வத்சலா."

"வேற என்ன."

"பத்மா பத்தியும் கவலையா இருக்கு."

"அவளுக்கென்ன... சீட்டுச் சேர்த்து ப்ரா வாங்கறா."

"போறும்."

"முப்பத்திரெண்டு ரூபா... தெரியுமா."

"ப்ச்."

"என் கிட்ட ஒண்ணு கூட இல்லை. எல்லாம் சாதா பாடீஸ்தான்."

"உன் கிட்ட எப்படிச் சொல்றதுன்னே தெரியலை."

"ஏன் நான் ப்ரா போட்டுண்டா உங்களுக்குப் பிடிக்காதா."

"பத்மா பஸ் ஸ்டாண்ட்ல ஒரு பையனோட நின்னுண்டிருந்தா."

"யாரு."

"கேட்டேன். அறிமுகப்படுத்தி வச்சா."

"என்னவாம்."

"ஆபீஸ் சிநேகிதனாம். இல்லை, மேல ஏதாவது உறவா தெரியலை. அக்காகிட்டே இதைச் சொல்ல வேண்டாம்னாள்."

"ஐயோ."

"பயப்படும்படி இல்லை. அதே சமயம் பயப்படாமயும் இருக்க முடியலை."

"நம்ம ஜாதிப் பையனா."

"நம்ம ஜாதில செந்தமிழ்ச் செல்வன்னு பேர் வச்சுப்பாளா."

"அடிப்பாவி."

"பதறாதே."

"எங்கப்பா கொன்னுடுவார்."

"எதுக்குச் சொல்லணும்..."

"ஜாதிவிட்டு ஜாதி சரிப்படுமா. நாசமாப் போப்போறா பத்மா. மாடு மாதிரி வளர்ந்துட்டாளேன்னு ஒரு செகண்ட் நினைச்சேன். இல்லை... ப்ரா போட்டுண்டு ஏமாத்தறாள்னும் பட்டுது. பையன் பேசினானா."

"பேசினான். நல்ல மாதிரியாப் பட்டுது."

"என்ன இருந்தாலும்..."

"அப்படி இல்லை வத்சலா. இப்ப காலம் மாறிண்டு வர்றது. எல்லாரும் நல்லாப் படிக்க ஆரம்பிச்சுட்டாங்க.

தெளிவா இருக்காங்க. ஜாதி முக்கியமில்லைன்னு தோண ஆரம்பிச்சிடுச்சு. ஆனா கல்யாணம். கல்யாணத்துக்குப் பிறகு ஜாதி நினைப்பு பிள்ளையாண்டானுக்கு வராம இருக்கணும்."

"கல்யாணமே பண்ணியாச்சா."

"இல்லை. அந்த அபிப்ராயம் இருக்கு. பழகிப் பார்த்து உறுதிப்படுத்திக்கப் போறாங்களாம்."

"நாறிப் போகப் போறா."

"கூடப் பொறந்தவளை வாய்க்கு வந்தபடி பேசாதே."

"அம்பது ரூபா கூடக் கேட்டதுக்கு எப்படி மூஞ்சியைத் தூக்கினா தெரியுமா. அம்பிகா கெட்டாள்."

"மனுஷாளைக் காசால அளக்காதே வத்சலா."

"காசு முக்கியம்னா. காசில்லைன்னா நாய் கூடச் சீந்தாது."

"என்னிலேர்ந்து இந்த ஞானம்."

"இன்னிக்கு சாயந்திரம் முதல்."

# 6

கற்றுக் கொண்டதற்கு அர்த்தம் செயல்படுத்தல். இல்லையெனில் கற்ற கல்வி கனவு மாதிரி மறைந்து விடுகிறது. 'சின்ன வயசுல நிறைய ராகமெல்லாம் டக்கு டக்குன்னு கண்டுபிடிப்பேன். இப்ப முடியலியே.' என்று யாரும் சொன்னால் அவர் சங்கீதம் கற்கவில்லை என்பதே பொருள்.

வத்சலா சாயந்திரம் கற்ற பாடத்தை இரவே மறந்தாள்.

"ஏன்னா... என்கிட்ட நூறு ரூபா இருக்கு. உங்க எண்பத்தி நாலுல நாப்பது மருந்துக் கடைக்குக் குடுத்துடலாம். மிச்சத்துல ஒரு ப்ரா வாங்கிக்கட்டுமா."

"ம்ம்..."

"உங்களைக் கேட்காம நான் எதுவுமே செலவு பண்ணமாட்டேன்."

"பத்மாகிட்ட ஏன் காசு கேட்டே, வத்சலா..."

"இனிமே கேட்கமாட்டேன். அந்த செந்தமிழ் செல்வன் நன்னாயிருக்கானா."

"அப்படீன்னா."

"பளிச்சுன்னு தெரியறானா இல்லை, எழுதி ஒட்டியிருக்கா."

"யார் நெத்தியிலேயும் எதுவும் எழுதி ஒட்டிப் பிறக்கலை வத்சலா. நல்ல மனசு நல்ல முகத்தைக் கொடுக்கும்."

"கறுப்பா."

''ஆமாம்.''

''ரஜினி மாதிரியா.''

''சினிமா ஆக்டரா.''

''ம்.''

''அப்படியே வெச்சுக்கோ. போகட்டும். அவன் நிறம்தான் முக்கியமா. பத்மாபத்தி கவலையே இல்லை உனக்கு.''

''என்னிக்கு அந்த வீட்டுப் படியிறங்கி வந்தேனோ அன்னிக்கே விட்டுப் போயிடுத்து.''

''அலட்டாதே வத்சலா. உங்கம்மா எத்தனை உதவி செய்திருக்கா. மனுஷாளை அலட்சியம் பண்ணாதே.''

''இருபத்திரெண்டு வயசுப் பெண்ணு பழகிப் புரிஞ்சுண்டு கல்யாணம் பண்ணிக்கப் போறதா நிக்கறதே, பகீர்ங்கறது எனக்கு. திமிரு. தட்டிக் கேட்க ஆள் இல்லாத திமிரு. வேலைக்குப் போய் நாலு காசு சம்பாதிக்கிற திமிரு. எவன் கூடவோ ஜாதி கெட்டு ஊர் சுத்தறது. வெக்கம் கெட்டு அத்திம்பேர் கிட்டயே பேசியிருக்கே. என்ன துணிச்சல்.''

''உன்கிட்ட இதை நான் சொல்லியிருக்கக் கூடாது.''

''எங்கிட்ட அவ சொல்லியிருந்தா சூட்டைக்காச்சி இழுத்திருப்பேன். அத்திம்பேர் கிட்ட குழைஞ்சிருக்கா. எல்லா ஆம்பளைக்கும் மச்சினின்னா கிறக்கம்தான். ஒரு நடை அம்மாகிட்டபோய் என்னன்னு விசாரின்னு சொல்லிவிட்டு வந்துடறேன்.''

''ப்ளீஸ், வேணாம்.''

''ஏன்... எனக்குப் பொறுப்பில்லையா.''

''உன்னால அவளுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க முடியுமா. சீர் பண்ண முடியுமா.''

''அதுக்காக.''

''அவளே தன் வாழ்க்கையை அமைச்சுக்கட்டும்.''

''தப்பு தண்டவாச்சுன்னா, உன் தங்கை இப்படியாமேன்னு கேட்க மாட்டாளா.''

''ப்ரே பண்ணுவோம்.''

''பண்ற பிரார்த்தனையை நமக்காகப் பண்ணுங்கோ. கவர்மெண்ட்லியே லாட்டரி சீட்டு வந்திருக்கு. ரெண்டு சீட்டு வாங்கியிருக்கேன். லட்ச ரூபா விழணும்னு வேண்டிக்கோங்கோ.''

''அப்பா... அத்தனை காசு எதுக்கு.''

''ஏன் இந்த ஒண்டுக்குடித்தனத்துலியே இருக்கணுமா, தலையெழுத்தா.''

''எனக்கிது போதும் வத்சலா. குழந்தைக்கு உடம்புக்கு வராம இருந்தா போதும். நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்.''

''போதும்கற மனசு இருக்க வேண்டியதுதான். ஆனா கிழிச வேட்டியே போதும்கறது சோம்பேறித்தனம்.''

ராஜாமணி வாய்விட்டு சிரித்தான்.

''இந்தக் கிழிச வேட்டிகூட இல்லாம கிளியனூர்ல ஈரிழைத் துண்டும் வெறும் மாருமா நான் பள்ளிக்கூடம் போயிருக்கேன். இப்படிப் பொண்டாட்டி, சைக்கிள், நைட் ஷோ, எனக்குன்னு ஒரு வாடகை வீடு, என் பேரு சொல்ல ஒரு புள்ளைன்னு நான் கனவு கூடக் கண்டதில்லை. வெள்ளை சட்டை போட்டுண்டு கம்பெனி வேலைக்குப் போறேனே இதுவே பெரிய கொடுப்பினை.''

''சரி... இதுக்கப்புறம்.''

''இதுக்கப்புறமும் என்ன வேணும் சொல்லு. சவுண்டி வேலைக்குத்தான் லாயக்குன்னு ஒரு தடவை எங்கப்பா அடிச்சார். என்ன அது சவுண்டி வேலைன்னு புரியலை. எங்கக்கா ஒருத்தி செத்துப் போனா, இருவது வயசுல புள்ளைப்பேறு சரியா நடக்காம. அப்ப கவனிச்சேன். பூணூலை இடமாப் போட்டுண்டு பிரேத சாம்பலைக் கிளறிக் கிளறி ஒருத்தன் எலும்பு பொறுக்கிண்டிருந்தான். சுடுகாட்டிலேயே உப்பு இல்லாத சமையல் பண்ணினான். குலை நடுங்கிப் போச்சு எனக்கு. இந்த வேலைதான் செஞ்சு பொழைக்கப் போறமான்னு கவலை வந்துடுத்து. கடவுளே, யார் பண்ணின புண்ணியமோ எனக்கும் ஒரு கம்பெனி வேலை கிடைச்சு, கல்யாணமும் ஆகி, குழந்தை பெத்து... போறும் வத்சலா, இரண்டு கையையும் தலைக்குமேல் கூப்பி எல்லாப் பெரிய மனுஷா காலிலேயும் விழணும் போல இருக்கு. என் வீடு நிறைய மனுஷா உண்டு. யாரும் ஒட்டலை. ஏன் என், தாயும் தகப்பனுமே ஒட்டலை. உன் சம்பாத்தியம், உன் பாடுன்னு மெட்ராசுக்கு அனுப்பிட்டார். திருவல்லிக்கேணி மேன்ஷன்ல, கக்கூஸுக்குப் பக்கத்து ரூம். ஒட்டல்ல சாப்பாடு. ஒன்பது வருஷம் அப்படி இருந்தேன். உங்கம்மா பார்த்துப் பார்த்து சமைச்சுப் போட்ட போது கண்ணில் ஜலம் தளும்பும். உன் இரண்டு தங்கைகளும் ஓடியாடி சீமந்தம் பண்ணித்தே... என் ஜென்மத்துக்கு மறக்க மாட்டேன். நெஞ்சார புடவை வச்சுக் கொடுத்தேன். என் வீட்டு விசேஷம் நியாயமா அந்த சீமந்தம். வந்து நூத்தியோரு ரூபா கொடுத்தார் எங்கப்பா. அதோட விட்டது சனியன்ற மாதிரி ஓடிப்போய் விட்டார். உங்க வீட்டு மனுஷாள உனக்குப் புரியலை வத்சலா. காசில்லையேங்கற குறையே தவிர, அவுங்க அத்தனை பேரும் சொக்கத் தங்கம். அது குறையாவும் எனக்குப் படலை.''

''ஆலை இல்லா ஊருக்கு இலுப்பைப் பூ சர்க்கரை...''

''சரி. இலுப்பைப் பூவாவே இருக்கட்டும். இல்லேன்னு தெரிஞ்ச பிறகு இலுப்பைப் பூ கசந்துருமா. அடச்சீன்னு தூக்கி

எறிய முடியுமா. கண்ல ஒத்தி சர்க்கரை, சர்க்கரைன்னு கொண்டாடத்தான் வேணும்."

"எங்கம்மாவையும் தங்கையையும் கொண்டாடறேளே, நான் அன்பா இல்லையா."

"நீயும் நானும் அன்போடத்தான் இருந்தாகணும். இல்லேன்னா அசிங்கம்."

"மச்சினி குழைஞ்சி பேசறது அற்புதமாக்கும்."

"தப்புக் கண்டு பிடிக்கறியா. அந்தப் பொண் என்கிட்ட மனசுவிட்டுப் பேசித்தே, அதுவே எனக்கு கிடைச்ச மரியாதை."

"யார் எதுக்கு சப்போர்ட் பண்ணுவான்னு தெரிஞ்சுண்ட தந்திரம். இருவது வயசுக்காரி பிழிய பிழிய அழுதுண்டு சொன்னா எது சொன்னாலும் சரியாத்தான் படும்."

"உன்கிட்ட பேசி ஜெயிக்க முடியாது. அது என் வேலையும் இல்லை. என் வேதனையெல்லாம் அந்தப் பொண் சின்ன வயசுல சதுரங்கம் ஆடி ஜெயிக்கும்படி போச்சேங்கறதுதான். வீட்ல கல்யாணம் பேச மாட்டான்னு தெரிஞ்ச பிறகு தனக்குத்தானே மாப்பிள்ளை தேடிக்கிறது சாதாரணமில்லை வத்சலா. தீ மிதிச்சு வரம் வாங்கற மாதிரி."

"இவ்வளவு அங்கலாய்ப்பு யாரும் படமாட்டா. எங்க வீட்ல இதுக்கு ரெண்டே வார்த்தைதான். கொழுப்பு. முதல் வார்த்தையை என் வாயால சொல்லமாட்டேன்."

"உலகத்துல பாதி பொம்மனாட்டிக்கு குரூர புத்திதான். ஏன்னு தெரியலை. எல்லாத்தையும் உடம்போட ஏன் சம்பந்தப்படுத்தறே. எங்கேயோ படிச்சேன். ஆணுக்கு உடல் வதை. பெண்ணுக்குப் பால் வதை. இப்படியேதான் வதை படறோம்."

"எனக்குத் தூக்கம் வர்றது."

"தூங்கு. நாளைக்கு இதை எங்கேயும் போய் பேசாதே."

"எனக்கெதுக்கு இந்த வெட்கக்கேடு. எப்படியோ ஒழியட்டும். நீங்க தாலி எடுத்துக் குடுத்து ஆசீர்வாதம் பண்ணாம இருந்தா சரி. ஊர் பொல்லாப்பு நமக்கு வேண்டாம்."

ராஜாமணி மௌனமாய் இருந்தான்.

"நடைபெறும் திருமணத்திற்குச் சுற்றம் சூழ வந்து வாழ்த்தியருள வேண்டுகிறேன். தங்கள் நல்வரவை விரும்பும் ரகுராமன். ரகுராமன்.. ரகுராமன்..."

தலைக்குமேல் ரேடியோ பாடியது.

# 7

**பி**ரபலமாய் இருந்த ஒரு சினிமாப் பாட்டு பத்துமாத

இடைவெளியில் மறைந்து போய் வேறு பல பாட்டுக்கள் பிரபலமாவது போல் அன்றைய வாக்குவாதம் மறைந்து வேறு பல விஷயங்களும் வந்து போயின.

ஆனால் அந்த நூறு ரூபாய் பத்மாவுக்குத் திருப்பிக் கொடுக்கவே முடியவில்லை என்பது மட்டும் உறுத்திக் கொண்டிருந்தது.

அடுத்த மாதம்... அடுத்த மாதம்... இதற்கு பிறகு இந்தக் காசு வந்தவுடன் என்று யோசித்து யோசித்துத் தள்ளிப் போய் விட்டது. திருப்பிக் கொடுக்காவிட்டால் என்ன என்ற கேள்வி வந்தது. கேட்டால் கொடுப்போம் என்ற அசிரத்தை வந்து விட்டது. 'நிஜமாவே முடியலை பத்மா. இத்தனைக்கும் பால், நெய் எல்லாம் குறைச்சுட்டேன். அப்படியும் குடித்தனச் செலவு முடியவேயில்லை போ' என்று சால்ஜாப்பு மனசுக்குள் வந்துவிட்டது.

பத்மா கேட்காதது இன்னும் அதிகம் உறுத்தியது. 'நம்ம செலவு அவளுக்கு இல்லை. அதனால கேட்கலை' என்ற சமாதானம் படர்ந்தது.

இதற்குப் பிறகு இரண்டு முறை நேரில் பத்மாவைப் பார்த்தாலும் செந்தமிழ்ச் செல்வனைப் பற்றிக் கேட்க முடியவில்லை. நூறு ரூபாயைத் திருப்பிக் கொடுத்துவிட்டுக் கேட்கலாம் என்றுதான் தோன்றிற்று.

நேரில் ஒரு முறை ஜோடியாகப் பார்த்தும் கேட்க முடியவில்லை. கேட்கிற மாதிரி பத்மாவும் இல்லை. வத்சலாவும் இல்லை. பக்கத்து வீட்டு மாமியோடு சாந்தி தியேட்டர் மாட்னிக்குப் போயிருந்தபோது வத்சலா செந்தமிழ்ச் செல்வனைப் பார்த்தாள். ஏதோ மூன்று மணி நேரம் சிரித்துவிட்டு வரலாம் என்றுதான் வத்சலா நினைத்தாள். 'கலாட்டா கல்யாணம்' என்கிற படத்தின் பெயரே அது சிரிப்புப் படம் என்று சொல்லிவிட்டது. ஆனால் பாதிப் படத்திலேயே வத்சலா சப்த நாடியும் ஒடுங்கி உறைந்து விட்டாள்.

இரண்டு முப்பது கிடைக்கவில்லை. நாலு நாற்பதும் கிடைக்கவில்லை. ஐந்து இருபது டிக்கெட் கிடைக்குமா, கிடைக்குமா என்று தவித்து லேடீஸுக்கு மட்டும் நல்ல வேளை டிக்கெட் கொடுத்து கவுண்ட்டரை மூடிவிட்டான்.

உள்ளே போனபோது ரெக்ஸோனா, ரெக்ஸோனா ரெக்ஸோ...னா என்று விளம்பரம் பாடிக் கொண்டிருந்தது. இருட்டில் தடவி ஸீட் பார்த்து உட்காரும்போது முன்சீட்டில் சிணுங்கல் கேட்டது. படம் ஆரம்பித்த கலர் வெளிச்சத்தில் யாரோ இளமையான ஆணும், பெண்ணும் என்பது தெரிந்தது.

அதுகள் இரண்டும் படமும் பார்க்க விடவில்லை.

''வேண்டாம், வேண்டாம் ப்ளிஸ்... வேண்டாம்.'' ஆணின் கையை அந்தப் பெண் விலக்கிக் கொண்டேயிருந்

தாள்.

''இதென்னடி வத்சலா. ரெண்டுங் கெட்டானா முன்னாடி உட்கார்ந்து கழுத்தை அறுக்கறது....'' மாமி அலுத்துக் கொண்டாள்.

இடைவேளை என்று போட்டவுடன் இரண்டும் வெளியே ஓடிவிட்டன. திரும்பி வரும்போது வத்சலா பார்த்து விட்டாள். பத்மா கூட வருவது செந்தமிழ்ச் செல்வனாய் இருக்க வேண்டும். ''செல்வா... இதுதான் நம்ம ஸீட்.''

பத்மா கவனிக்கவில்லை. நல்ல வேளை மாமி இல்லை. பின்பக்கம் போய்விட்டு வரும்போது இருட்டாக்கி விட்டார்கள்.

''அப்பனே, தொணதொணக்காம படம் பார்.'' மாமி இடைவேளைக்குப் பிறகு சிணுங்கல் ஆரம்பித்ததும் முன்பக்கம் குனிந்து சொல்லிவிட்டாள்.

பிறகு சிணுங்கல் அடங்கி விட்டது. விஷமங்கள் தொடர்ந்து கொண்டிருந்தன.

பத்மாவின் வலப்புறம் உட்கார்ந்து கொண்டிருந்தவன் அவளை இடப்பக்கம் இழுத்து நெருக்கிக் கொண்டிருந்தான். எங்கெங்கோ தொடுகிறான் போலிருக்கிறது. அவள் உதடு கடித்துத் திணறுவது சுத்தமாய் தெரிந்தது.

மாமிக்குத் தெரிந்தால் போதும். ஸ்டோர் முழுக்கப் பரவி விடும். பிறகு புழங்குவது கடினம். எல்லோர் வாயிலும் புகுந்து எழவேண்டும். வத்சலா பேசாது அவர்களையே கவனித்துக் கொண்டிருந்தாள்.

சுத்தமாய் தெரிகிறது. இடது கையை அவள் கழுத்தைச் சுற்றி வளைத்துப் போட்டு சுதந்திரமாய் தொடுவது சுத்தமாய்த் தெரிந்தது.

''ச்சீ... கழிசடை....'' மடியில் தூங்கும் பையனைச் சுளீரென்று அடித்தாள்.

''என்னடி எதுக்கு தூங்கற குழந்தையை அடிக்கிற.''

"எங்கெங்கயோ கையை விடறது பீடை."

பத்மா குரல் கேட்டு திரும்பினாள். தலை கவிழ்ந்து கொண்டாள்.

குழந்தை வீறிட்டு அழுதான். வத்சலா உலுக்கி அழுகையை நிறுத்தினாள். ''மாமி, நான் பஸ் பிடிச்சுப் போறேன். நீங்க பின்னால வாங்கோ.'' எழுந்து இருளில் தடவித் தடவி நடந்து வீட்டிற்கு வந்து விட்டாள்.

இதென்ன வெட்கக்கேடு.

'மகாபாவி. இப்படி உடம்பு முழுக்கக் கை வைக்கிறானே சண்டாளன். இந்தத் தேவடியா சிறுக்கிக்காவது கூச்சம் வேண்டாம். பப்ளிக் தியேட்டர்னு ஒரு அச்சம் வேண்டாம். அடி நாசமத்துப் போறவளே.'

உடம்பு முழுவதும் நடுங்கிற்று. காபி பில்டரைப் பிடுங்கும்போது மொத்தமும் சிந்தி வீணாயிற்று. வேலைக்காரியை டீ பொட்டலம் வாங்க அனுப்பி வந்தவுடன் டீ போட்டாள். குடித்தாள். ராஜாமணி படியேறியதும் அவனுக்குக் கலந்து கொடுத்துவிட்டு, ''அம்மாகிட்டப் பேசணும், வாங்கோ" என்று அவனையும் அழைத்துக் கொண்டு தாய் வீடு போனாள். இரண்டு மணி நேரம் வீடு ரகளைப்பட்டது. பேசாமல் இருந்தது பத்மாவும், ராஜாமணியும்தான். ''முடிவா என்ன சொல்ற." பத்மாவுக்கு எதிரே இடுப்பில் கைவைத்துக் கேட்டபோது நிதானமாய் பதில் வந்தது.

''அவர் பெயர் செந்தமிழ்ச் செல்வன். எம்.காம்., எம்.ஏ., தமிழ் யாதவர். ஆனால் அவருக்கோ அவர் அப்பாவுக்கோ பால் கறக்கத் தெரியாது. எப்படி நம்ப அப்பாவுக்கோ தாத்தாவுக்கோ மந்திரம் தெரியாதோ அதுமாதிரி."

''மந்திரம் தெரியலைன்னா ஜாதி இல்லைன்னு ஆயிடுமா." அப்பா இரைந்தார்.

''அது முக்கியமில்லைன்னு ஆயிடறதில்லையா. அவருக்கு ஆயிரத்து எண்ணூறு ரூபாய் சம்பளம். எனக்கு கன்ஃபார்ம் ஆச்சுன்னா ஆயிரத்து நானூறு வரும். எங்க பாட்டை நாங்க பார்த்துப்போம்."

''அவன் வீட்ல சரீன்னுட்டாளா."

''இதே மாதிரி குதிப்பா..."

''அதைத் தாண்டிக் கல்யாணம் பண்ணிப்பியா."

''அப்படித்தான் தீர்மானம்."

''நடுவுல உட்டுட்டான்னா."

''விடமுடியாது."

''எப்படிச் சொல்றே இவ்வளவு தைரியமா."

''எங்களுக்குச் சட்டப்படிக் கல்யாணம் ஆயிடுத்து."

''தாலியக் காணோமேடீ..."

''இனிமேல் கட்டிப்பேன் ஒரு நல்ல நாள் பார்த்து. நாங்க பண்ணினது ரிஜிஸ்டர் மேரேஜ், ஒப்பந்தம்."

''என்ன எழவுக்கு அப்புறம் காத்திண்டிருக்கேள்." அம்மா வெடித்தாள்.

''என் வேலை கன்ஃபார்ம் ஆறதுக்கு, ட்ரெயினிங் பீரியட் முடியறதுக்கு."

''சினிமா தியேட்டர்லதான் ட்ரெயினிங் நடக்கிறதோ."

''அதுவும் ஒரு மாதிரி ட்ரெயினிங்தான். என்னை அவர் புரிஞ்சுக்கறதுக்கும், நான் அவரைப் புரிஞ்சுக்கறதுக்கும்."

''அவன் வீடு எங்கே இருக்கு."

''இப்ப போக வேண்டாம்."

''ஏன்.''

''வர்ற ஜூலை பத்து எனக்கு வேலை நிரந்தரம் ஆயிடும். அப்ப போகலாம்.''

''அதுவரைக்கும் அவனைப் பார்க்கப்படாது''

''சரி.''

''பேசப்படாது.''

''சரி.''

''லெட்டர் எழுதப்படாது.''

''சரி.''

''இப்படி ஒரு கூத்துப் பண்ணியிருக்கியேடி மகாபாவி. கல்யாணம் ஆயிரம் காலத்துப் பயிர்.''

''பத்மா, நான் மிஸ்டர் செல்வனோட பேசிப் பார்க்கலாமா.'' சின்ன தூறலாய் ராஜாமணி ஆதூரம் காட்டியதும் பொங்கிப் பொங்கி அந்தக் குழந்தை அழுதது.

''நமக்கு சகலபாடியாயிட்டீங்க. கங்கிராஜுலேஷன்.'' ராஜாமணி அந்தப் பையனின் அறைக்குள் நுழைந்து கை நீட்ட, பயந்து பின் வாங்கினான். விவரம் சொல்லப் பதறினான். ''நான் பார்க்கணுங்க பத்மாவை... நான் பார்க்கணுங்க...'' என்று அலைந்தான்.

அமைதிப்படுத்தி உட்கார வைத்ததும் சற்று அடங்கினான். ''எனக்கு நீங்க ஒரு விஷயம் தெளிவுபடுத்தணும். ஒரு உத்தரவாதம் தரணும். உங்க வீட்டுக்கு இது தெரியுமா. தெரிஞ்சாப் புரிஞ்சுக்குவாங்களான்னு சொல்லணும். அப்படித் தெரிஞ்சு எதிர்த்தாலும் எல்லா எதிர்ப்பையும் மீறி அவளுக்குக் கோவில்ல தாலி கட்டி, தனிக் குடித்தனம் வச்சு, குழந்தை பெத்து, நீங்க நல்ல தம்பதியரா வாழ்ந்து காட்டணும். லவ் பண்றது சினிமா தியேட்டர்ல கிஸ் பண்றதுக்கு மட்டுமில்ல செந்தமிழ். மீசை முளைச்சுட்டா லவ் பண்ணத் தயார்னு நினைச்சுக்கக்கூடாது. பௌருஷம் வேண்டும். காதலிச்ச பெண்ணைக் கடைசிவரைக் கண் கலங்காமக் காப்பாத்தறது பௌருஷம்.''

செந்தமிழ் உணர்ச்சிவசப்பட்டு மேசையில் கற்பூரம் ஏற்றி அடித்து அணைத்தான்.

''உங்க உணர்ச்சி எனக்குப் புரியறது செந்தமிழ். ஆனா இதுமட்டும் போதாது. உங்கப்பா அவளை மறந்துடுவியான்னு அதட்டினாலும் இதே மாதிரிக் கற்பூரம் ஒத்திடப்படாது. அவங்க பேசக்கூடாது, பார்க்கக்கூடாதுன்னு தடை போட்டிருக்காங்க பத்மாவுக்கு. அதையே நீங்களும் கடைபிடிக்கணும். ஜூலை பத்தாம் தேதி அவளுக்கு வேலை கன்ஃபார்ம் ஆனவுடனே நான் என் மனைவியோட உங்க வீட்டுக்கு வருவேன். எந்த ஊரு உங்களது, பொள்ளாச்சியா. விவரம் சொல்லுவேன். கூட

தைரியமா நீங்க நிக்கணும்; பேசணும்; வாதாடணும். மறுத்தா மீறி என் கூட வந்து எங்க வீட்டுப் பெண் கழுத்துல தாலி கட்டணும்.

எந்த ஒட்டலில் சாப்பிட றீங்க. உடுப்பி கணேச பவன்ல ஊத்தப்பம் நல்லாப் போடுவான். நானும் ஒன்பது வருஷம் ராத்தவறாம ஊத்தப்பம் சாப்பிட்டிருக்கேன், தம்பி. பேச்சி திசை திருப்பிச் சிரிக்க வைத்து நட்பாக்கி...

''யார் யாதவன். யார் பிராமணன். யார் க்ஷத்திரியன். யார் வைசியன். தொழிலால் வேறுபட்டுத்தானே ஜாதிகளாய் பிரிந்தனர் மக்கள். குலத் தொழிலே மாறிக் குமஸ்தாவாய் வந்த பிறகு குலமென்ன, கோத்திரமென்ன. உடையில் வித்தியாசம் ஒழிந்துவிட்டது. உணவு வித்தியாசம் விட்டுக் கொடுத்து ஒழிக்கலாம். உடுப்பி கணேச பவன் ஊத்தப்பம் எந்த ஜாதி உணர்வு. ஜாதி ஒரு வசதியான செருப்பு. தேய்ந்து விட்டதெனில் கழட்டி எறி. தலையில் வைத்துக்கொண்டு அலையாதே.''

ராஜாமணி பேச்சுக்குக் கைகட்டி செந்தமிழ் செல்வன் தலையசைத்தான்.

பத்மா உயிரற்ற பிணமாய் நடமாடினாள். அத்திம்பேரைப் பார்க்க ஒருமுறை வீட்டுக்கு வந்தாள். அக்காவுடன் பேசாமல் சரிந்து காத்திருந்தாள். ராஜாமணி வந்ததும் அவனுடன் எழுந்து வெளியே போனாள்.

''எங்க போயிருந்தேள் ரெண்டு பேரும்.''

''பீச்சுக்கு.''

''இத்தனை நாழி பிச்சுலயா இருந்தேள். மணி பத்தாகப் போறது.''

''ஒன்பது மணி வரைக்கும் இருந்தோம். பிறகு கொண்டுபோய் விட்டுட்டு வரேன்.''

''நீங்க பண்றது நன்னாயில்லை.''

''அடி போடி.''

''கல்யாணம் சாதாரண விஷயமில்லை. நாளைக்கு ஒண்ணு கிடக்க ஒண்ணு ஆச்சுன்னா ஊர் உங்களைத்தான் பழிக்கும்.''

''யாரு வேணா எது வேணா ஆவோம். அதுக்காக வாழ்க்கைச் சக்கரம் நிக்குமா.''

''என்ன சொல்றா என் தங்கை.''

''அழறா.''

''ம்ம்... அப்புறம்.''

''பாட்டுப் பாடறா.''

'என்ன பாட்டு.''

''உண்மைக்குக் காலம் வந்தால் அதை உயர்வெனச்

சொல்வதுண்டு.

உண்மைக்குப் பங்கம் வந்தால் அதை உயர்வெனக் கொள்வதுண்டோ."

"என்ன உரிமை... தியேட்டர்ல திருட்டுத்தனம் பண்ற உரிமை, கல்யாணத்துக்கு முன்னாடி ஒரு மனுஷனை ஏறெடுத்துப் பார்த்திருப்பேனா நான். இதென்ன துக்கிரித்தனம்..."

"வீட்டோட வளர்ந்துட்டே..."

"அவளை என்ன விபச்சாரத்துக்கா அனுப்பினோம். ஆபீஸ் வேலைக்குப் போடீன்னா வேலை காயமாறத்துக்கு முன்னாடி காதலாம். மண்ணாங்கட்டியாம்."

"ச்சீ... அசிங்கம். இப்ப என்ன நடந்தது. உங்கப்பாவுக்கு செலவு குறைச்சல். நல்லதுதானே."

"நல்லது இனிதானே நடக்கணும்..."

நடந்தது.

ஜூலை மாதம் பத்தாம் தேதி குலசேகரப் பெருமாள் யாதவர் வந்து ராஜாமணி வீட்டுக் கதவைத் தட்டித் தன்னைத்தானே செந்தமிழ்ச் செல்வனின் தகப்பனார் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். தமிழ்ப் புலவராம், ஆசிரியராம், புத்தகம் பல எழுதுகிறாராம்.

"சட்டப்படி திருமணம் நடந்துட்டதாச் சொன்னாங்க. உங்கள்ல யாருக்கும் அது தெரியுமா. சாட்சியானீங்களா." கேட்டார்.

"இல்லீங்க..." ராஜாமணி பதில் சொன்னான்.

"களவு வழி காதல்ங்றது நம்ம நாகரீகத்துல உண்டுங்க. தவறில்லை. ஆனா எனக்கு இன்னும் ஒரு பொண்ணு இருக்கு. திருமணம் நடக்கணும். வேற எதுவும் தவறு நடக்கலைன்னா நிதானமா செய்வோம். தவறியிருந்தா உடனடி சரி பண்ணிடுவோம். என்ன சொல்றீங்க."

"ஒரு தர்மத்துக்குக் கட்டுப்பட்டு நின்னாங்க இதுவரை. இனியும் தடை பண்ணினா தர்மம் குலையலாம்."

"சேர்த்துடலாங்கறீங்களா."

"ஆமாங்க."

"சேர்த்துடுவோம். ஆனா எங்க வீடு வராது. நானும் அவளைப் பெத்தவளும் வரோம்."

"போறுங்க."

"அப்ப திருப்பதிக்குக் கூட்டியாந்திருங்க பொண்ணை. கோவிந்தனே சாட்சியா இருக்கட்டும்."

கோவிலுக்கு எதிரே தாலி கட்டினார்கள். கோவிந்தன் சன்னிதியில் மாலை மாற்றினார்கள். ஏதோ உடுப்பி ஹோட்டலில் விருந்து சாப்பிட்டார்கள். வீடு திரும்பினார்கள்.

நண்பர்கள் உதவி செய்ய வீடு பார்த்தான். பத்மா குடி

பெயர்ந்தாள். ''என் ஜென்மாந்திரத்துக்கும் உங்களை மறக்கமாட்டேன் அத்திம்பேர்.'' என்று ராஜாமணி கைகளைப் பற்றி பத்மா கண்களில் ஒற்றிக் கொண்டாள். அக்காவைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் வெளியேறினாள்.

''நான் என்னன்னா தப்புப் பண்ணினேன்.'' அழுது குமுறிய வத்சலாவை ராஜாமணி அணைத்துக் கொண்டான்.

நாலு வருஷத்துக்குப் பிறகு பத்மா ஒரு பெண் குழந்தை பெற்றாள். மணிமொழி என்று பெயரிட்டாள். மணி என்பது ராஜா மணி நினைவாம். ஒரு மரியாதையாம். நன்றியாம்.

பத்மா பிள்ளை பேறுக்குக் காசு சேர்க்க வேண்டிய அவசியமில்லை. ஆபீஸ் லீவு கொடுத்து மருத்துவச் செலவை ஏற்றது. அம்மாவை உதவிக்கு அழைத்துக் கொண்டாள். வத்சலா மறுபடி உண்டாகியிருக்கும்போது உதவி செய்ய யாரும் இல்லாமல் போனார்கள். அடுத்த தங்கை ராதா வரமுடியாது என்று சொல்லிவிட்டாள்.

''அவளும் போயிட்டா யார் சமைப்பா.'' சி.ஏ. படித்துக் கொண்டிருந்த தம்பி அதட்டி நிறுத்தி விட்டானாம். ராதா எம்.எஸ்ஸி., முடித்ததும் கல்லூரியில் உதவிப் பேராசிரியை வேலை கிடைத்தது. வேலை செய்தபடி எம்.எட்., சேர்ந்தாள்.

ரமணன் மூன்றாவது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தான். அப்பாவுடன் அவ்வப்போது போய் சித்தியைப் பார்த்துவிட்டு வருவான். பென்சில், புத்தகம், விளையாட்டு சாமான் என்று வாங்கி வருவான்.

''அம்மாவுக்கு ஒரு புடவை கேட்டு வாங்கிண்டு வாடா பத்மாகிட்ட.''

பத்மா ஸாரி என்று சொல்லிவிட்டாள். ராதா மிகவும் பழம் புடவையைக் கொடுத்தனுப்பினாள். பளிச்சென்று மல்லாக்கத் தள்ளி ஒதுக்கி விட்டதுபோல் வத்சலா உணர்ந்தாள். தானே அசைந்து அசைந்து காரியங்கள் செய்ய வேண்டியிருந்தது.

'வீட்டு வாடகை நாநூறு ரூபாய் உயர்த்தப்படும். இஷ்டப்பட்டவர்கள் இருக்கலாம்' என்று அறிவிக்கப்பட்ட போது ரௌத்திரம் பொங்கிற்று. ''இருபது ரூபா இருபது ரூபாயாக சம்பளம் உயர்கிறது. இப்படி படீரென்று நானூறு கேட்டால் எப்படி'' என்று முதலில் அத்தனை குடித்தனங்களும் கோஷமிட்டன. முடியாது என்று மறுத்தன.

''பழைய வாடகை வாங்க மாட்டேன்'' என்று வீட்டுக்காரன் போய் விட்டான். குடித்தனக்காரர்கள் சமாதானப் படுத்தி எழுபத்தைந்து உயர்வுக்கு ஒப்புக் கொண்டார்கள்.

ராஜாமணி ஓவர் டைம் செய்தான். தனியே வாரத்தில் சில மணி நேரம் போய் வக்கீலுக்கு டைப் அடித்துக் கொடுத் தான். கூட ஆகும் செலவை ஈடுகட்ட நாயாய் உழைத்தான்.

பத்தாயிரம் முன்பணம் கட்டிக் கடைசித் தம்பி ரகு பஹ்ரெய்ன் போவதாய் செய்தி கிடைத்தது. ராதா உதவி செய்கிறாளாம். பத்மாவும் செந்தமிழ்ச் செல்வனும் விமானச் செலவை ஏற்றுக் கொள்கிறார்களாம்.

போவதற்கு முன் பத்மா வீட்டில் விருந்து. 'முடிந்தால் வா' என்று வத்சலாவுக்கு அழைப்பு வந்தது. முடியாமல் வத்சலா போனாள். என்னதான் நடக்கிறது பார்ப்போமே என்று போனாள். யார், யார் என்னென்ன ஸ்திதியில் இருக்கிறார்கள் என்று அறிய ஆவலோடு போனாள்.

போனது தவறு. மதியாதார் தலைவாசல் மிதித்தது தவறு.

மூன்று படுக்கையறை கொண்ட அபார்ட்மென்ட். செல்வா, செல்வா 'என்று வாய்க்கு வாய் கூப்பிடுகிற பெருமிதம். பிள்ளை பெற்றவளுக்கு ஜிமிக்கி எதுக்கு. பத்மா முத்து ஜிமிக்கி போட்டுக் கொண்டிருந்தாள். ''வீட்டு வாடகை என்ன பத்மா.''

''தெரியலை. கம்பெனி அலாட் பண்ணியிருக்கு. இப்ப செல்வா ஆபீஸர். அடுத்த வருஷம் நானும் ஆபீஸராயிடுவேன். எக்ஸாம் ரிஸல்ட் வரலை.''

''பாவம் பத்மா, பரீட்சை எழுதற போது நிறைமாசம்.'' செல்வா அவள் தோளில் கை போட்டுக் கொண்டு பேசினான்.

மேஜையில் விருந்து வட்டமாய் அடுக்கி வைக்கப்பட்டது. தட்டுகளும் கரண்டிகளும் தனியே அடுக்கப்பட்டிருந்தன. மிளகு ரசத்தில் ரொட்டித் துண்டை வறுத்துப்போட்டு விட்டு ஸுப் என்று குடித்தார்கள். ''இலை போடலியா.'' என்று வத்சலா கேட்க, எல்லோரும் சிரித்தார்கள்.

''பஃபே டைப் சாப்பாடாம். வேண்டுமென்பதை வேண்டுபவர் எடுத்துப் போட்டுக் கொள்ளலாமாம். சாப்பிட்டது போல இல்லை. இது மாமிசமாடி. பட்டைச் சோம்பு வாசனை அடிக்கறதே.''

''அத்திம்பேர் வரார்னு சகலமும் வெஜிடேரியனாப் பண்ணினேன். இது மசாலா கறிப்பொடி. காலிஃப்ளவர் அப்படித் தெரியறது. சாப்பிடேன்.''

ஏதோ எண்ணெய் குமட்டிற்று. போதும் என்று கீழே வைத்து விட்டு மோர் குடித்தாள். காரமாய் நெஞ்சில் நீர் ஏறிற்று. தனியே வீட்டைச் சுற்றிப் பார்த்தாள். சாப்பாடுதான் வாய்க்குப் பிடிக்கவில்லையே தவிர, சமையலறை கண்கொள்ளாக் காட்சியாய் இருந்தது.

''இது எதுக்கு....'' கண்ணாடிக்குள் பம்பரமாய் ஏதோ சுற்றிக் கொண்டிருந்தது.

''அக்கா, அதைத் தொடாதே. அது முட்டை அடிக்கிறது.''

''ஏண்டி முட்டை சாப்பிடுவியா.''

''உங்க தங்கச்சி சிக்கனே சாப்பிடும் இப்ப.'' செந்தமிழ் செல்வன் சிரித்தபடி பேசினான்.

அந்தச் சிரிப்பில் ஒரு வெற்றி தெரிந்தது.

'கோழி திங்கற பத்மா. அதான் இப்படிக் கொடுமை படர்ந்திருக்கு மனசுல. உடம்பு தளதளன்னு ஆயிருக்கு.'

திடுக்கிட்டு பத்மாவின் முதுகை உற்றுப் பார்த்தாள்.

ப்ராவே இல்லை.

''ஏன் ப்ரா போட்டுக்கலை, மறந்துட்டியா.''

''இப்ப போட்டுக்கறதேயில்லை, வீட்ல.''

''ஏன்...''

''தேவையில்லை. அது இல்லாமயே ட்ரிம்மா இருக்கேனே, எதுக்கு இதெல்லாம்.''

உற்று உற்று நாலு முறை கவனித்ததில் ப்ரா வேலையை ரவிக்கையே செய்து கொண்டிருந்தது.

வீடு முழுக்கப் பரவும் மெல்லிய இசை. பளிச்சென்ற சுவர்கள். சித்திரங்கள். சொகுசான சோபா. படுக்கையறையில் குளிர் சாதனம். நாலு ஆள் படுக்கிற படுக்கை. தலைமாட்டுக்கு மட்டும் விழும் மெல்லிய விளக்கொளி. ஆயிரக்கணக்கான புத்தகம் அடுக்கிய அலமாரி. இரண்டு ஐஸ் பெட்டி. 'இது பிராமணர் வீடா, யாதவர் வீடா. இல்லை, பணக்காரர் வீடு.'

வத்சலாவுக்குத் தன் ஜாதி எதுவென்று புரிந்தது.

கிளம்பும்போது பத்மா தன் குழந்தையை ராஜாமணியிடம் கொடுத்தாள். பல கோணங்களில் போட்டோ எடுத்தாள். ஒட்டி நின்ற ரமணனை இரண்டு படம் எடுத்து விட்டு ''நகர்ந்து கொள்'' என்று கட்டளையிட்டாள். ரமணன் அந்த வீட்டு மனிதர்களைப் பார்த்து சற்று மிரண்டு போயிருந்தான்.

# 8

**வ**த்சலாவுக்குப் புருஷனுடன் ஒரு போட்டோ எடுத்துக்கொள்ள ஆசை வந்தது. கல்யாணத்தின்போது எடுத்தது, பிள்ளை பிறந்த பிறகு அவனை மட்டும் தனியே எடுத்தது என்று இரண்டு கறுப்பு-வெள்ளை போட்டோ மட்டுமே உண்டு. கலர்ப் படங்கள் இதுவரை எடுத்ததில்லை. பத்மாவின் குழந்தையுடன் இருக்கும் புருஷன் அருகே வத்சலா நகர்ந்தாள்.

''என்னையும் அவரையும் ஒரு போட்டோ எடு, பத்மா.''

காமிராவைக் கண்ணில் பொருத்தியபடி 'போகஸ்' செய்து கொண்டிருந்த பத்மா ஒரு கணம் நின்றாள்.

''செல்வா, மிஸ்டர் ராஜாமணியையும் அவர் ஒய்ஃபையும் ஒரு போட்டோ எடுங்க.'' கட்டளையிட்டு நகர்ந்து விட்டாள்.

சுளீரென்று ஓர் அவமான உணர்வு வத்சலாவைத் தரையில் அழுத்திற்று. ''என்னடி சொன்னே.'' விருட்டென்று போய் பத்மாவின் முழங்கையைப் பிடித்தாள்.

ஹால் நிசப்தமாயிற்று. சகலரும் திரும்பினார்கள்.

''நான் ராஜாமணி ஒய்ஃப் மட்டும்தானா. உனக்கு அக்கா இல்லையா. நானும் வந்ததிலேர்ந்து பார்த்துண்டிருக்கேன், மூஞ்சி கொடுத்துப் பேசலே.''

''முதல்ல என் முழங்கைலேர்ந்து உன் கையை எடு.''

''ஏன்.''

''ரவிக்கை அழுக்காயிடும். கையை எடு.'' பத்மா உதறி விடுவித்துக் கொண்டாள்.

''இப்ப கேள் உன் கேள்வியை. எல்லா முன்னாடியும் பதில் சொல்றேன்.''

''நான் உனக்கு அக்கா இல்லையா.''

''இல்லை.''

''ஏண்டி.''

''விட்டுப்போச்சு.''

''எதனால.''

''என்னிக்கு தியேட்டர்ல தூங்கற உன் குழந்தையைச் சுளீர்னு அடிச்சு 'கழிசடை கையா போடறே'ன்னு அதட்டி னியோ அன்னிக்கே விட்டுப்போச்சு. தியேட்டர்ல நீ அடிச்சது உன் பிள்ளையை இல்லை, என்னை, என்னுடைய செல்வாவை.''

''நான் கண்டிக்கக் கூடாதா உன்னை.''

''தாராளமாக் கண்டிக்கலாம். தியேட்டர்ல என்னைத் தொட்டுத் திருப்பிச் சாய்ந்திரம் வீட்டுக்கு வான்னு கூப்பிட்டிருந்தா உன் வசவு அத்தனையும் காதுல வாங்கி உன் மடில விழுந்து அழுதிருப்பேன். எனக்கு உதவி பண்ணுன்னு கெஞ்சியிருப்பேன். தூங்கின குழந்தையை அடிச்சுக் கதறவிட்டு என்னையும் ஜாடையாத் திட்டிப் பாதிப் படத்துல போனே பார், அன்னிக்கே கசந்து போச்சு.''

''நான் வந்து வீட்ல சொன்னதால தாண்டீ உன் விஷயம் இப்படி நல்லபடியா முடிஞ்சது.''

''நோ. இன்னும் சுமுகமா முடிஞ்சிருக்க வேண்டிய விஷயத்தை நீ உடைச்சித் திருப்பினே. எங்க ரெண்டு பேரையும் பிரிச்சுப்போட்டே. பார்க்கக் கூடாது, பேசக் கூடாதுன்னு கட்டளை போட வச்சே. இந்த மனுஷன் அந்த நேரம் மனசு மாறியிருந்தா, என் கதி என்ன ஆகியிருக்கும்.''

''நாங்க நடத்தின சோதனைல உங்க 'லவ்' உறுதியாச்சு.

இல்லேன்னா கல்யாணத்துக்கு முன்னாடி குழந்தை பிறந்திருக்கும்."

''வாயைக் கழுவுடி. கல்யாணம் பண்ணி நாலு வருஷம் கழிச்சுக் குழந்தை பெத்துண்டவடி நான். நீ நடத்தினது சோதனையா. கொடுமையா. நரக வேதனை. பிரிஞ்சாத்தான் காதல் பலப்படும்கறது பொய்யான கூத்து. அந்த பிரிவு நேரத்துல எங்களைத் தனித்தனியா பார்த்துப் பலம் கொடுத்தாரே அத்திம்பேர், அவருக்காக, அந்த மனுஷனுக்காக உன்னை இங்கே படியேற விட்டேன்."

''இல்லேன்னா..."

''உன்னை என் வீட்டுக்கு எதுக்கும் கூப்பிட மனசில்லை எனக்கு. ஏன்னா உன்னை மனுஷியாவே நினைக்கலை."

''நடு தியேட்டர்ல் என் கண் எதிர்க்கயே என் தங்கை தேவடியாத்தனம் பண்ணிண்டிருக்கறதைப் பார்த்து சும்மா இருக்கணுமா."

''என்ன சொன்னே..." பத்மா கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டாள். ''தேவடியாத்தனமா. யெஸ் தேவடியாத்தனம்தான். இதோ இந்த வீடு, இந்த சோபா, இந்த ஜிமிக்கி, இந்தப் புடவை, இந்த ரவிக்கை, நாற்பது பவுன் நகை, ரேடியோ, டேப் ரெக்கார்டர், ஏ.ஸி., படுக்கை எல்லாம் நான் தேவடியாத்தனம் பண்ணி வாங்கினதுதான். மனசுவிட்டுப் பேசிக் காதலிச்சு திருப்பதியில சிம்பிளா நாலு பேர் முன்னாடி கல்யாணம் பண்ணித் தனிக் குடித்தனம் வச்சு யார் தயவும் இல்லாம இப்படி வளர்ந்து குழந்தை பெத்துக் கொண்டது தேவடியாத்தனம்னா யெஸ்... நான் தேவடியாதான். பத்தினின்னு அலட்டிக்கிறவ வெளியே போகலாம்."

''என் பழம்புடவையைக் கட்டிண்டு முதன் முதல்ல ஆபீஸ் போன நாய் இத்தனை பேச்சு பேசுமா."

''வாஸ்தவம். நான் அதை மறுக்கலை. அந்த எண்பது ரூபா பழம்புடவைக்குப் பதில் எங்கப்பா உன் கல்யாணத்துக்குப் பட்ட கடன் எட்டாயிரத்தை நான் அடைச்சேன். நீ கழுத்துல போட்டுண்டிருக்கிற தாலிக்கொடி என் உழைப்புல வாங்கினது. இதுவரைக்கும் உனக்கு அது தெரியுமா வச்சிருந்தது ஒரு நன்னிலதான். இன்னிக்கி நீ நன்னியிருக்கான்னு கேட்ட பிறகு சொல்லும்படியாச்சு."

''காசு இருக்குன்னு ஆடறியாடீ. என்கிட்ட இத்தனை சாமான் இல்லேன்னுதானே இத்தனை இழிவா நடத்தறே..." வத்சலா அழுகையுடன் திசை மாறினாள்.

''ச்சீ, காசு இன்னிக்கு வரும். நாளைக்குப் போகும். பளபளக்கிற பீங்கான் தட்டைப் பார்த்துத்தானே பொருமறே..." பத்மா கையிலிருந்த பீங்கான் தட்டைக் கீழே போட்டு

உடைத்தாள். "கீழே போட்டா எப்படி உடையறது பார். இப்படி உடைஞ்சு போச்சு நம்ம உறவு. கைதவறி உடைஞ்ச மாதிரி பேச்சுத் தவறி உறவு விட்டுப்போச்சு. இனி ஒட்டாது. காசு முக்கியம்னா அத்திம்பேரை காட்ஃபாதரா என் குழந்தைக்கு நிக்க வச்சிருப்பேனா. என்னிக்காவது என் அத்திம்பேரை இளக்காரமாப் பேசியிருப்பேனா. கூடப் பிறந்தவளுக்கு செய்யாம மினுக்கறவ இல்ல நான். இன்னிக்கு இவனோட ப்ளேன் டிக்கெட், சி.ஏ. படிக்கிறவனுக்கு ஆயிரம் ரூபாய்க்கு மேல் புத்தகம், ராதாவுக்குப் பிறந்த நாள் தவறாமப் புடவை, ஒவ்வொரு வருஷத்துக்கும் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் என்னால முடிஞ்சது செய்துண்டிருக்கேன். உனக்குச் செய்ய மாட்டேன். செய்ய மனசில்லை. மடில தூங்கின குழந்தையை பளீர்னு அடிச்சுக் கழிசடைன்னு அன்னிக்கு மறைமுகமா என்னைத் திட்டினியே, எப்படிக் கூசிக் குறுகினேன் தெரியுமா. எத்தனை ராத்திரி அழுதேன் தெரியுமா. 'உன் வீடு கல்யாணம் பண்ணாது. தானா அந்தப் பொண் புருஷன் தேடிக்கறா. எதுக்குத் தடுக்கறே'ன்னு அத்திம்பேர் சொல்லியும் நடுக்கூடத்துல நிக்க வச்சு அட்டகாசம் பண்ணினியே. மறப்பேனா உன்னை."

"அன்னிக்குப் பிரிச்சு வச்சஎல்லாரும் நல்லவளாப் போயிட்டா. நான்தான் கெட்டவளா ஆயிட்டேனாக்கும்."

"யாரைச் சொல்றே. நம்ம அம்மா, அப்பாவையா. அவா பிரிச்சுதான் போடுவா. அவா மரபு வேறே. அவாளுக்கு லவ் புரியாது. அவா மரபுப்படி தியேட்டர்ல சினிமா ஒண்ணா உக்காந்து பாக்கறது தப்பு. நான் குத்தமே சொல்லமாட்டேன். ஜூலை பத்து தேதிக்குப் பிறகு போய் விவரம் கேளுங்கோன்னேன் அப்பாகிட்டே. என் வேண்டுகோளை மீறலியே. எங்கம்மா அதுக்கு முன்னாடி அசிங்கப்படுத்தலியே, சோறு போட்டா. தலை பின்னி விட்டா. நல்லவனாடி, நல்லவனாடீன்னு திருப்பித் திருப்பிக் கேட்டா. எனக்கு அவாளைப் புரியறது. அவாகிட்ட எள்ளத்தனை ஆங்காரம் இல்லை. கவலை இருந்தது."

"நான் ஆங்காரப் பட்டேனா உன் லவ்வுக்கு."

"வேற என்ன பேர் சொல்றது. இன்னி வரை எங்கம்மா என்னைத் தேவடியான்னு திட்டலை. இத்தனை வருஷம் கழித்து இப்ப நீ கேட்டே அந்தக் கேள்வியை. இதுக்கு வேறு என்ன பேர் சொல்றது."

பத்மாவின் குழந்தையைத் தொட்டிலில் விட்டு விட்டு ராஜாமணி ரமணனோடு மனைவி அருகே வந்தான்.

"சரி போதும் வத்சலா. விடு. வா வீட்டுக்குப் போகலாம்."

"அத்திம்பேர்..." பத்மா குறுக்கிட்டாள்.

"போயிட்டு வரேன் பத்மா."

"எம் மேல கோபமா."

"இல்லை. இது அக்கா தங்கையோட சண்டை. எனக்குப் புரியறது. ஆனா வத்சலா எனக்கு மனைவி. இப்ப நீ பேசினவரைக்கும் போதும்."

"அத்திம்பேர், உங்களுக்கு வருத்தமாயிருந்தா நான் மன்னிப்புக் கேட்டுக்கறேன். வத்சலா கிட்ட கூடக் கேட்டுக்கறேன்."

"அடடே... அப்படி ஒண்ணும் நான் கேட்கலை. உன் கோபத்துல நியாயம் இருக்கு. கோபத்தைக் காட்டியாச்சு. கோபம் ஏன்னு சொல்லியாச்சு. போதுமே. மேல மேல பேச்சு எதுக்கு."

விக்கி விக்கி அழுது கொண்டிருந்த மனைவியை அணைத்தபடி பிள்ளையோடு ராஜாமணி படியிறங்கினான். சைக்கிள் ரிக்ஷா வைத்து வீடுவந்தான்.

பிரிஞ்சி மசாலா வயிற்றைக் குமட்ட வத்சலா வாந்தியெடுத்தாள். இடுப்பு வலி எடுக்க மறுநாள் மாலை பெண் குழந்தை பெற்றாள்.

பெண் குழந்தை கத்தக்கூட திராணியற்றுப் பூஞ்சையாய் இருந்தது. பஞ்சுப் பொதியாய் வைக்கப்பட்டிருந்தது.

"எனக்குப் பொண்ணு இப்ப பொறக்கலைன்னு யார் அழுதா," முதன் முதலாய் குழந்தையை மடியில் போட்டதும் வத்சலா அதைப் பார்த்துக் கலங்கினாள். இரண்டே குழந்தைகள் போதும் என்று டாக்டரிடம் சொல்லிவிட்டாள்.

செலவு தலைகால் தெரியாமல் எகிறிற்று. வாடகை பாக்கியும் மளிகை பாக்கியும் நாக்கைப் பிடுங்கிக் கொள்ள வைத்தன. அம்மாவுக்கு போஸ்ட் கார்டு எழுதிக் கடன் கேட்க, ராதா ஐநூறு ரூபாய் கொடுத்து விட்டுப் போனாள்.

ஏக திண்டாட்டத்துக்குப் பிறகு ராஜாமணிக்கு பதவி உயர்வு, கூட முன்னூறு ரூபாய் காசும் வந்தது. சேமிப்புக்கு நாலு காசு வேண்டும் என்று வத்சலா அருகே உள்ள குழந்தைக் காப்பகத்தில் டீச்சர் வேலைக்குப் போனாள். ஊர் குழந்தைகளுக்குப் பணிசெய்து தன் குழந்தைகளை வளர்த்தாள்.

வரவோ செலவோ கடனோ சேமிப்போ காலம் யாருக்கும் எதன் பொருட்டும் காத்திருப்பதில்லை. மேடு பள்ளங்களை லட்சியம் செய்யாது ஓடிக்கொண்டிருந்தது.

வத்சலாவின் பெண் குழந்தைக்கு ஐந்து வயதாகும்போது ராதாவின் கல்யாணம் நிச்சயம் ஆயிற்று.

# 9

அடேங்கப்பா, கல்யாணமா அது. கோவில் உத்சவம்

மாதிரி ஜானவாசத்தில் வாண வேடிக்கை பொறி பறந்தது. வத்சலாவுக்கு இரண்டு பட்டுப் புடவைகள், ராஜாமணிக்கு இரண்டு ஜதை வேட்டி, பட்டுத் துண்டு வைத்துக் கொடுக்கப்பட்டது. முன் பக்கம் அதிகம் வழுக்கை விழுந்த மாப்பிள்ளை. பெரிய விஞ்ஞானியாம். ஜெர்மன் தேசத்தில் வேலையாம், முப்பத்திரண்டு வயசாம். ராதா கூடக் கண்ணாடியும் கொஞ்சம் கூன் முதுகுமாய் இருந்தாள்.

ஆனால் பிள்ளை வீட்டார் போட்ட வைர அட்டிகை எல்லாக் குறைகளையும் மறைத்தது. ஹேமமாலினியில் கல்யாணம் நடத்துகிற தெம்பு அப்பாவுக்கு எப்படி வந்தது.

பஹ்ரெய்ன் போய் வந்த தம்பி பண்ணுகிற வேலை இது. சென்னைப் பட்டினத்து சி.ஏ.வும் கூட சேர்ந்து கொள்கிறான். நகையும் உடையும் ராதாவே சம்பாதித்துக் கொண்டாள். ஜானவாசத்தில் கூடவே நடந்து வந்த பல பெண்களை வத்சலாவுக்கு அடையாளம் தெரியவில்லை.

''இவ என்னுடைய மூத்த பெண் மாமி... மெட்ராஸ்லதான் இருக்கா.''

''அப்படியா... பார்த்ததில்லையே.'' இப்போது உறுத்துப் பார்க்கிறதைக்கூடத் தாங்க முடியவில்லை. வைர மூக்குத்திக்கும் டாலடிக்கிற கம்மலுக்கும் நடுவே வெறும் ஒற்றைத்தாலிக் கொடி மட்டும் போட்டுக் கொண்டு போனால் எல்லாப் பார்வையும் உறுத்தாமல் என்ன செய்யும்.

அம்மாவிடம் கிசுகிசுப்பாய் தன் ஆதங்கம் சொன்னாள்.

''அவ்வளவுதானேடி... இந்தா.'' அம்மா நடுத்தெருவில் தன் கழுத்தில் கிடந்த இரட்டை வடத்தைக் கழற்றி வத்சலா கழுத்தில் போட்டாள். கழுத்து கனத்தது. சுலபமாய் ஒன்பது பவுன் இருக்கும்.

பிள்ளை கொண்டு வந்தானாம். வத்சலா சங்கிலியோடு சுற்றிச் சுற்றி நடமாடினாள். ஓடி ஓடி உபசரித்தாள்.

''ராஜாமணி, இங்க வாங்கோ. எப்படி இருக்கு இந்த வாட்ச்.'' அப்பா கை நீட்டினார். தங்க வாட்ச் பளபளத்தது.

''நன்னாயிருக்கே. என்னது ரோலக்ஸா.''

''ரோலக்ஸ்தான். பிடிச்சிருக்கா.''

''ஏ... க்ளாஸ்...''

''இந்தாரும். கையை நீட்டும். இதுவும் பஹ்ரெய்ன் சரக்குதான்.'' மாப்பிள்ளை நாண வாட்ச்சை மாட்டினார்.

''என்கிட்ட ஒண்ணு இருக்கு. எதுக்கு இப்ப.''

''அதைக் கழட்டி என்னண்டே கொடுத்துரும்.''

''எதுக்கு இது.''

''எனக்கு வாட்ச் வேண்டாமா மாப்பிள்ளை.''

''தாராளமா எடுத்துக்கலாம். எனக்கெதுக்கு ரோலக்ஸ்.''

''அதேதான் நான் கேட்டேன். எனக்கெதுக்கு ரோலக்ஸ். மாப்பிள்ளைக்குக் கொடுன்னேன் கடைசிவன்கிட்ட. வாங்க மாட்டேன்பாரோன்னு பயமா இருக்குன்னான். எப்படித் தந்திரமா உம்ம கைல மாட்டிட்டேன் பார்த்தேளா. உமக்குத்தான் நன்னாருக்கு ரோலக்ஸ்.''

''ரொம்ப தேங்க்ஸ்.''

''ரகுக்குச் சொல்லுங்கோ.''

''ரகு, ரொம்ப தேங்ஸ்ரா.''

''போங்க அத்திம்பேர், நன்றியெல்லாம் சொல்லிண்டு.''

''பஹ்ரெய்ன்லே என்ன வேலை.''

''சொன்னா சிரிப்பேள்.''

''எதுக்கு சிரிக்கணும்.''

''சர்வர் வேலை. ஃபைவ் ஸ்டார் ஹோட்டல்ல சர்வரா இருக்கேன். குமாஸ்தா வேலைக்குப் போனேன். அதைவிட இந்த பேரர் வேலைலே காசு அதிகம்னு தெரிஞ்சுது. மாறிட்டேன்.''

''இதுல சிரிப்புக்கு என்ன இருக்கு.''

''சிலர் சிரிக்கறா.''

''ரகு, திருடல, கொள்ளையடிக்கல. நேர்மையா எந்த வேலையும் அவமானமில்லை. நல்லபடி வேலை செய். நல்லபடி சேர்த்து வை. இதுல அவமானமே இல்லை. ஆல் த பெஸ்ட்.''

''தேங்ஸ் அத்திம்பேர்.''

''எதுக்கடா தேங்ஸ்.''

''அன்னிலேர்ந்து இன்னி வரைக்கும் நீங்கதான் அத்திம்பேர் எங்களுக்கு வழிகாட்டி. எங்களுக்கு உரமே நீங்கதான். வாட்ச் என்ன வாட்ச்... செருப்புத் தச்சுப் போடணும் தோலை..'' மச்சினன் பொங்கி அழுதான்.

''போடா கூஸ். நீ கஷ்டப்படறே, நீ சம்பாதிக்கிற. இதுல எனக்கு என்ன பங்கு, சந்தோஷமா இருந்தா சரி.''

''சந்தோஷமா இருக்கேன் அத்திம்பேர்.''

''குடிக்கறே போலிருக்கே.''

''பீர் மட்டும் குடிக்கறேன்.''

''எதுக்கு.''

''இல்லேன்னா அந்த ஊர் வெயிலுக்குச் சரிப்பட்டு வராது.''

''ரைட்.. லிமிட்டா வச்சுக்கோ எதையும்.''

''தேங்க் யூ அத்திம்பேர், அப்பாகிட்ட சொல்ல வேணாம் இதை.''

''மாட்டேன்.''

கூட நின்று கேட்டுக் கொண்டிருந்த வத்சலாவுக்கு வியப்பாய் இருந்தது தம்பி பேச்சு. 'சர்வருக்கா இத்தனை காசு. சர்வருக்கா அஞ்சாயிரம் சம்பளம்.'

''மிச்சம்... டிப்ஸாவே அஞ்சாயிரம் வாங்குவேன்.''

கல்யாணம் முடிந்து புறப்படும்போது அம்மா கழுத்து நகையைக் கேட்டாள். ''எனக்கு ஒன்றும் கிடையாதா.'' வத்சலா பொருமினாள்.

''ரெண்டு பட்டுப் புடவை கொடுத்திருக்காண்டீ ரகு. ரெண்டும் சேர்த்து மூவாயிரம் ரூபா விலை. என்ன விளையாடறே.''

கழுத்தில் கனக்கிற நகையைக் கழட்டிக் கொடுத்ததும் மனசு கனத்துப் போயிற்று.

''உங்களுக்கு வாட்ச் கொடுத்துட்டு எனக்குப் புடவை கொடுத்து ஏமாத்திட்டான் ரகு.'' வழியில் கண்ணில் ஜலம் துளிர்க்கப் பேசினாள்.

''உனக்குக் கஷ்டமா இருந்தா சொல்லு கழட்டி இப்பவே திருப்பிக் கொடுத்துட்டு வரேன்.''

''எதுக்கு, நல்ல வாட்சா இருக்கு. நம்மால வாங்க முடியுமா. அதென்னவோ எனக்குப் பண்ணணும்னா யாருக்கும் மனசு வரலை.''

''அப்படியில்லை வத்சலா. நீ அதிகம் எதிர்பார்க்கறே.''

''ஏன் எதிர்பார்க்கக்கூடாது. நானும் கூடப் பிறந்த பிறப்புதானே.''

ஒரு வாரம் கழித்து தம்பி வீடு வந்தான். சின்னதாய் ஒரு தங்க பிஸ்கட்டை தட்டில் வைத்துக் கொடுத்தான். ''வேணுங்கற மாதிரி பண்ணிக்கோ'' என்று அன்பளிப்பாய் கொடுத்தான். சென்ட் பாட்டில், டிரான்ஸிஸ்டர், விளையாட்டு சாமான்கள் என்று கொடுத்தான்.

அத்திம்பேரைத் தனியே அழைத்து குசுகுசுவென்று பேசினான்.

நிலம் வாங்கப் போகிறானாம். வளசரவாக்கத்தில் பத்து கிரவுண்ட் காலிமனை பேசி முடித்துவிட்டானாம். அதில் இரண்டு கிரவுண்ட் இவர் பெயரில் இருக்குமாம்.

பெயர் மட்டும்தான் இவருடையதே தவிர ஆளுகை அவனுடையது.

''தாராளமா வாங்கேன். எப்ப வரணும் ரிஜிஸ்ட்ரேஷனுக்கு.''

''அதுல அரை கிரவுண்ட் என் பேருக்குத் தரப்படாதா.'' வத்சலாவுக்குக் கேள்வி வந்தது. வெறும் பட்டாவுக்கு மட்டும் தன் புருஷன் பெயரா.

''போடி அசடு. ஒரு அளவு வேண்டாம் ஓசி வாங்கறதுக்கு.'' ராஜாமணி திடமாய் மறுத்துவிட்டான்.

கையெழுத்து மட்டும் போட்டு விட்டுத் திரும்பினான்.

ரகு மறுபடி பஹ்ரெய்ன் போக, சி.ஏ. படித்த ஸ்ரீதர் பம்பாய் பயணமானான். இங்கு விட பம்பாயில் சி.ஏ.வுக்கு மதிப்பு அதிகமாம். இங்கு உள்ள நூறு 'பைலுக்கு அங்கே உள்ள பத்து ஃபைல் சமமாம். அதாவது பத்து மடங்கு வருமானம். என்ன ஒரு கஷ்டம், நிரந்தர பாம்பே வாசம். அப்பாவும், அம்மாவும் தனியே இருக்க வேண்டும்: ராதா இருக்கிறாள் ஒரு வருஷத்திற்கு. ஜெர்மனி போக விசா கிடைக்கவில்லை. நிரந்தர பிரஜையாக நாளாகும். மேலும் ராதாவுக்குப் படிப்புப் பாக்கியிருக்கிறது.

''ஏன்னா... நீங்களும் பஹ்ரெய்ன் போங்களேன்.''

''எதுக்கு.''

''நிறைய பணம் கிடைக்குமே.''

''இது போதும் வத்சலா. இனிமே அங்கெல்லாம் போக என்னால முடியாது. எனக்குக் குழந்தைகள் முக்கியம். அதுகளை விட்டுப் பிரிய முடியாது. உன் கை சாப்பாடு, இந்த வீடு, என் இரண்டு செல்வங்கள் இது போதும். இதுகளைக் கூட இருந்து ஆளாக்கினால் போதும்.''

ராஜாமணி காது கொடுத்து மேற்கொண்டு எந்த உப மானமும் கேட்கவேயில்லை. தீர்மானமாய் மறுத்துவிட்டான்.

காலம் மேலும் ஓடிற்று. வத்சலாவின் பெண் ப்ரியா பூப்படைந்தாள். 'நன்னு பாலிம்ப நடசி ஒச்சதியோ நா ப்ராண நாயகி' என்று கண்மூடி வயலின் வாசித்தாள்.

அப்பாவோடு மியூசிக் அகாடமி கச்சேரிகள் அனைத்துக்கும் போனாள். பிள்ளை மிருதங்கம் கற்றுக் கொண்டான். மூவரும் ஜனவரி குளிரில் தலைசுற்றி மப்ளர் கட்டிக்கொண்டு நடு இரவில் வந்து கதவு தட்டுவார்கள். சங்கீதம் பற்றி விவரமாய் பேசுவார்கள்.

வத்சலாவுக்கு அவர்கள் பேசுகிற பாஷை புரிந்ததேயில்லை. ''சங்கராபரணம் ரொம்பப் பிரமாதம்'' என்று பாராட்டியபோது நமுட்டுச் சிரிப்பு சிரித்தார்கள். சாஸ்திரிய நடனம் பார்த்துவிட்டு வத்சலா கன்னத்தில் கை வைத்து அசந்தபோது 'ஜதி தப்பறது' என்று குறை சொன்னார்கள்.

''அப்ப... சினிமால எது வந்தாலும் அபத்தம்னு சொல்றேளா.'' வத்சலா சண்டையிட்டாள்.

''நோ நெவர், சினிமால வேலை தெரிஞ்ச ஆள் நிறைய உண்டு. ஆனா வெளிய காட்டறபோது மசாலா மிக்ஸ் நிறைய...'' பிள்ளை கட்டைக் குரலில் வாதம் புரிந்தான்.

''என்னமோ போ... என்னை மாதிரி இருக்கறவாளுக்கு சினிமாதான் பெரிய மருந்து. காதுக்குக் குளுமையா பாட்டு, கண்ணுக்கு குளுமையா காட்சி, மனசுக்கு இதமா காமெடி.''

''சினிமால கனவு சீன் வைக்கறாம்மா, நெஜமேயில்லை."

''எதுடா நெஜம். ஈயச் சொம்பும், இரண்டு ரூம் வாடகை வீடும், இழுத்துக்கோ பறிச்சுக்கோங்கற சம்பாத்தியமும் தான் எனக்கு நெஜம். இதுல என்ன சந்தோஷம் வேண்டிக்கிடக்கு."

''நம்ம அப்பா இருக்காளே இந்த வீட்ல."

''போதும். இருபது வருஷம் குடித்தனம் பண்ணி ரெண்டாயிரத்து நூறு தாண்டலை. ஒத்தை காஸ் குடித்தனமா இருக்கு. ரெண்டாவது சிலிண்டர் கிடைக்கலை."

''காசுதான் முக்கியமா."

''ஏன்... மண்ணா திங்கறே. காசு குடுத்து வாங்கற அரிசி, பருப்புதானே கொட்டிக்கறே."

''ஏம்மா கோவப்படறே." பிள்ளை ஒதுங்கினான்.

''என்ன விவாதம்." ராஜாமணி உள்ளே வந்தான். ''இத்தனை வயதுக்கப்புறமும் அம்மாவுக்குக் காசாசை போகலைப்பா..." பிள்ளை முனகிற்று.

''என்ன்டா.. என்ன சொன்னே. இழுத்து வச்சு சூடு போடுவேன் படவா. யார் கிட்ட பேசறேன்னு ஞாபகம் வச்சுக்கோ. உன் வயசு என்ன.. என் வயசு என்ன."

''இவ்வளவு கோபம் எதுக்கு வத்சலா."

''எல்லாம் நீங்க குடுக்கற இடம். காசு ஆசையாம். காசில்லாமையாடா இப்படி எருமை மாடுமாதிரி வளர்ந்திருக்கே."

''அம்மா, அண்ணா சொல்ற பாயிண்ட் வேற.." பெண் இடை மறித்தாள்.

''செருப்பு பிஞ்சிடும். உள்ள போடி. முளைச்சுமூணு இலை விடலை. பேச்சைப் பாரு."

குழந்தைகள் மிரண்டு ஒதுங்கினர். ராஜாமணி நிலைப்படியைப் பிடித்துக் கொண்டு அசையாது நின்றான்.

# 10

''இப்படிக் கடுமையாக் கெட்ட வார்த்தையா குழந்தைகளைப் பேசறது எனக்குப் பிடிக்காது வத்சலா." நிதானமாய் ரசம் பிசைந்து கொண்டபடி பேச ஆரம்பித்தான்.

''உனக்கென்ன குறை ஏன் இத்தனை ஆத்திரம். சாதாரண வாக்குவாதத்துக்கு இத்தனை கெட்டவார்த்தை ஏன்."

''எனக்கு என்ன குறையா. ஆயிரம் குறை. யார் காது குடுத்துக் கேட்கப் போறா. எல்லாம் என் தலையெழுத்து."

''மனசு திறந்து கொட்டு வத்சலா."

''இன்னொரு சிலிண்டர் இல்லையேன்னு முதல் குறை. கறிகாய் வைக்க ஐஸ் பொட்டியில்லையேன்னு இன்னொரு குறை. ஊர் முழுக்கக் கறுப்பு வெள்ளை டிவி. சீப்படறது. நான் அடுத்த வீட்டு வாசற்படில உக்காந்து பார்க்க வேண்டியிருக்கேன்னு குறை. திக்குக்கு ஒண்ணா பறந்து என் தங்கைகளும், தம்பிகளும் லட்சலட்சமா சம்பாதிக்கறா. என் புருஷன் இந்த ராயப்பேட்டையை விட்டு அசையாம தரையைச் சூடுபடுத்திண்டிருக்காரே, தண்டக் கருமாந்திரமான்னு குறை."

''நான் எங்க ஒழியணும்னு நினைக்கற நீ." முதன் முறையாய் ராஜாமணி அதிர்ந்து பேசினான்.

''எங்க வேணா ஒழியிங்கோ... எனக்கு வேண்டியது..."

''பளீரென்று எச்சல் கையால் ராஜாமணி வத்சலாவை அறைந்தான்.

''அப்பா." பெண்ணும், பிள்ளையும் ஓடி வந்து அவன் கையைப் பற்றிக் கொண்டார்கள்.

''ச்சு... இது எனக்கும் என் மனைவிக்கும் நடக்கற சண்டை. ரெண்டு பேரும் ஓரமா போய் நில்லுங்கோ..ம்."

இருவரும் சுவரோரம் ஒதுங்கி நின்றனர்.

வத்சலா கோபம் குறையாமல் கன்னம் பொத்தியபடி ராஜாமணியை முறைத்துப் பார்த்தாள்.

''ம்ம்... சொல்லு. உனக்கு வேண்டியது பொட்டி. நிறையப் பொட்டி. டிவி பொட்டி, ஐஸ் பொட்டி, ரேடியா, டேப்ரெக்கார்டர் பொட்டி, வீடியோ பொட்டி, இரும்பு பீரோ பொட்டி, நகைப் பொட்டி. பொட்டிப் பொட்டியா வாங்கி அடைச்சு வச்சுக்கறதுக்குச் சொந்த வீடுன்னு ஒரு பொட்டி. அதானே."

''ஏன் என்ன தப்பு."

''முட்டாள். இந்தப் பிள்ளை இரண்டு வயசுல மூக்குசளி நெஞ்சுல ஏறிச் செத்துப் போயிருந்தா. இந்தப் பெண் பிறந்த மறுநாள் குளிர்ல விறைச்சு நீலமாயிட்டிருந்தா, இந்த பொட்டியை வச்சு என்ன பண்ணுவே. இது புள்ளைப் பொட்டி, இது பொண்ணுப் பொட்டின்னு துணியால துடைச்சுத் துடைச்சு வச்சுக்குவியா. திடகாத்திரமா இருக்கற பிள்ளைய எருமை மாடுங்கறே. பெண் குழந்தையைப் பட்டி சிறுக்கிங்கறே. என்ன நினைப்பு உனக்கு.

தயவு செய்து என் குழந்தைகளுக்கு உங்க வீட்டு மனுஷாளை உதாரணம் காட்டாதே வத்சலா. தியேட்டர் நடுவுல இன்னொருத்தன் தொடைல கை வச்சுண்டு எதிர்காலக் கணக்குப் போட்டா ஒரு தங்கை, நெஞ்சு தழைஞ்சு, முலைக்காம்பு சுருங்கிப் போறவரைக்கும் உத்தியோகம் பார்த்துட்டுக் கல்யாணம் பண்ணிண்டா ஒருத்தி. தூசியும் மணலும் வெப்பமும் குளிரும் உள்ள தேசத்துல அஞ்சாயிரம்

ரூபாய்க்குத் தட்டு அலம்பிக் காசு சம்பாதிக்கறான் ஒரு தம்பி. எங்கே திருடன் அதிகமோ எங்கே கள்ள மார்க்கெட் அதிகமோ, எங்கு கறுப்புப்பணம் அதிகமோ அங்குதான் எனக்கு சம்பாத்தியம் அதிகம்னு இன்னொருத்தன் போனான். அது வாழ்க்கையே இல்லைங்கறது என் கணிப்பு. இது என் தீர்மானம். அவா கணிப்பு வேற. அதை நான் விமர்சனம் செய்யமாட்டேன்.

பதினெட்டு வயசுல கல்யாணம் பண்ணி எனக்கு வாழ்க்கைப்பட்ட உன் சந்தோஷத்துல பாதிகூட அந்த ஜென்மங்கள் அனுபவச்சிருக்க முடியாதுன்னு எனக்குத் தெரியும். உனக்குப் புரியலை. நான் தேடினது ஒரு நிறைவு. எனக்கு அந்த நிறைவு இந்தக் குழந்தைகள் மூலம் கிடைச் சாச்சு. உனக்குக் கிடைக்கலைன்னா அது உன் துரதிருஷ்டம்.

அதோ அந்த ஜன்னலுக்கு வெளிய ஒண்ணு நிக்கறதே என்னை மாதிரி, அது என்ன மரம் தெரியுமா. இருபது வருஷமாப் பார்க்கறியே, என்ன மரம்னு தெரியுமா உனக்கு. அது வில்வ மரம்.

பூத்துக் குலுங்காது. பழம் விழுந்தா திங்க முடியாது. பசேல்னு அது பாட்டுக்கு வளரும். பூ இல்லை, பழம் இல்லைன்னு அதைத் தண்டக் கருமாந்திரம்னு யாரும் சொல்வாளா. அது அருமை யாருக்குத் தெரியுமோ அவாளுக்குத்தான் தெரியும். எப்பேர்ப்பட்ட மருந்துன்னு விவரம் உள்ளவனுக்குப் புரியும். என்னை மட்டுமில்லை, எதையும் தண்டக் கருமாந்திரம்னு இனிமேல் சொல்லாதே.

இந்தக் குழந்தைகள் இரண்டும் தியாகராஜர் பிறந்த நாள் அன்னிக்கு மேடைல உட்கார்ந்து பஞ்சரத்ன கீர்த்தனம் பாடித்து. கண் கலங்கிப் போச்சுடி. 'பகவானே, எப்பேர்ப்பட்ட பாக்கியம் எனக்கு'ன்னு விம்மி விம்மி அழுதேன். தியாகையர் கிருதிக்கு அழறேன்னு நினைச்சுண்டா பக்கத்தில இருக்கிறவா.

பரம சந்தோஷம்டீ இந்தக் குழந்தைகள். லட்சம் பெட்டிக்கு ஈடாகுமாடி இந்த சிறுசுகளுடைய புத்தியும் தெளிவும். என் கண்ணெதிர்க்கக் குழந்தைகளை ஏதாவது சொன்னே வெட்டிப் பொலி போட்டுருவேன்."

சோற்றை உதறித் தள்ளிவிட்டு எழுந்தான். கையலம்பினான், சட்டை மாட்டி வெளியே கிளம்பினான்.

"அப்பா..." மறுபடி குழந்தைகள் சூழ்ந்து கொண்டன.

"ச்சு... நான் எங்கயும் போகமாட்டேன்டா. இந்த ராயப்பேட்டைலயே தண்டக் கருமாந்திரமாத் தரையைச் சூடு பண்ணிண்டு உக்காந்திருப்பேனே தவிர உங்களை விட்டுப் பிரிய மாட்டேன்."

செருப்பை மாட்டிக்கொண்டு கிளம்பினான்.

பெண்ணும் தாவணி உடுத்திப் பின்னால் ஓடினாள். சற்று நேரம் அம்மாவையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த

பிள்ளை தானும் செருப்பு மாட்டித் தந்தையைப் பின்தொடர்ந்தான்.

கடற்கரை மணலில் நீலக்கடலை வெறித்துக் கொண்டிருந்த அப்பாவின் இடதும் வலதுமாய் குழந்தைகள் உட்கார்ந்து கொண்டார்கள்.

'நிதி சால சுகமா.' தகப்பன் தொடங்கக் குழந்தைகள் பாடினார்கள்.

''தெரியலைடா. எனக்குத் தெரியலை. உங்கம்மா கரெக்டா இருக்கலாம். காசு மகா முக்கியம்னு உங்கம்மா சொன்னது கரெக்டா இருக்கலாம். என்னால அப்படி நினைக்க முடியலை. அவளுக்கு எத்தனை கஷ்டமோ. உள்ளே எத்தனை ஆசையோ. அதை அலட்சியப்படுத்தினது தப்பா இருக்கலாம். ஆனா இப்பக்கூட அதிகக் காசு எதுக்குன்னு தோணறதே தவிர...''

தகப்பன் பேச முடியாமல் குலுங்கிக் குலுங்கி அழ, பெண் அவன் முகத்தைத் தடவிக் கொடுத்தாள். பிள்ளை கடல் வெளியை வெறித்துக் கொண்டிருந்தான்.

# 11

ராஜாமணி சுட்டிக் காட்டிய வில்வ மரத்தை வத்சலா திரும்பிக் கூட பார்க்கவில்லை. மரத்துக்கு அப்பால் தெரியும் தெருவையே நாள் பூராவும் வெறித்துக் கொண்டிருந்தாள்.

பஹ்ரெய்ன் தம்பி ரகு மறுபடி வந்து வீடு கட்ட ஆரம்பித்துவிட்டான். ஸ்ரீதரும் அவனும் காசு போட்டு மாடியும் கீழுமாய் பதினாறு அறைகள் கொண்ட வீடு கட்டுகிறார்கள். எப்போது முடியுமோ அப்போது வந்து இங்கே நிரந்தரமாய்க் குடியிருப்பார்கள். ராதா ஜெர்மனி போய்விட்டாள். பத்மாவும், செந்தமிழ்ச் செல்வனும் தூத்துக்குடி குடிபெயர்ந்து விட்டார்கள். அதே உரத் தொழிற்சாலை ஆபீஸ். தூத்துக்குடியில் செலவு கம்மி. அதே சமயம் எல்லா வசதிகளும் உண்டு. அம்மாவும் அப்பாவும் ஜெர்மனி போய் விட்டு வந்தார்கள். புதுமனையில் குடியேறினார்கள். அம்பாஸிடர் காரில் தீர்த்த யாத்திரை போனார்கள். வத்சலா வந்தால் ஏதாவது வம்புவரும் என்று ஒதுங்கினார்கள். இதைக் கொடு, அதைக் கொடு என்று கேட்கிறதாய் குற்றம் சொன்னார்கள்.

வத்சலா வீட்டை விட்டுப் போவதைக் குறைத்தாள். ராஜாமணியோடு பேசுவதைக் குறைத்தாள். குழந்தைகளோடு ஓரிரு வார்த்தைகளோடு நிறுத்திக் கொண்டாள். பெண் கல்லூரி போகத் துவங்கினாள். பிள்ளை வேலை தேட ஆரம்பித்தான்,

''ஏமாத்திட்டேள் என்னை... எல்லாருமா சேர்ந்து

ஏமாத்திட்டேள். எட்டாவது வரைக்கும் போதும்னு படிப்பை நிறுத்திட்டுப் பதினெட்டு வயசுல குமாஸ்தாவுக்குக் கல்யாணம் பண்ணித் தள்ளிட்டுப் பாரம் குறைஞ்சதுன்னு ஒதுக்கிட்டேள். என் கல்யாணக் கடனை அடைக்கிற சாக்கில மூலைக்கு ஒருத்தரா ஓடி உங்களை உசத்தி உசத்தி பிரிஞ்சிட்டேள். உசந்த பிறகு நான் இளக்காரமாயிட்டேன். நான் லவ் பண்ணியிருக்க முடியாதா. லவ் பண்ணவிட்டிருப்பேளா. ஆமா... தேவடியாத்தனம் தான்னு நெஞ்சை நிமிர்த்திப் பேசினாளே ஒருத்தி. அப்பாவும் அம்மாவும் வெட்கம் கெட்டு விஜிடபிள் பிரியாணி தின்னாளே அன்னிக்கு. நான் எம்.எட். படிச்சிருக்க மாட்டேனா. எட்டாவது போதும்னு நிறுத்தினது யாரு. தட்டு அலம்பறானாம்; திருட்டுக் கணக்கு எழுதறானாம், நாறின காசா அது. பூஞ்சையா பொண்ணு பிறந்ததுக்கு யார் காரணம். நானா. மோர் சாதம் சாப்பிட்டா பூஞ்சைக் குழந்தைதான் பிறக்கும்.

பொட்டிக்கு ஆசைப்படறேனாம் பொட்டிக்கு. ஒரு காலத்துல மனுஷா நிலம் நீருக்கு ஆசைப்பட்டார். அப்புறம் நகைக்கு ஆசைப்பட்டா. இப்ப பொட்டிக்கு ஆசைப்படறா. வீட்டுக்கு ஆசைப்படறா. என்ன தப்பு. உட்கார்ந்து தோசைக்கு உளுந்து அரைச்சதுண்டா என் வீட்டு ஆம்பளை. குழந்தையைக் கொன்னுட்டுப் பொட்டி வாங்கிண்டு வான்னா சொன்னேன். அந்தக் குழந்தைகளுக்கும் சேர்த்து தான் சொன்னேன். பெத்ததுகளைப் பிரிச்சுப் போட்டா விட்டுருவேனா. மாட்டேன். எனக்குப் பொட்டி வேணும்.

டிவி பொட்டி, வீடியோ பொட்டி, ஐஸ் பொட்டி வேணும். உங்களால முடியலைன்னா விடுங்கோ, என் குழந்தைகள் கிட்டேர்ந்து வாங்கிக்கறேன்."

மரத்துக்கு அப்பால் தெருவில் ப்ரியா நடந்து வருவது தெரிந்தது. யாரோ கூட வந்தவன் நின்று பேசினான். கையசைத்து விட்டுப் போனான். ப்ரியாவின் அசைவில் துள்ளலும் லஜ்ஜையும் தெரிந்தன.

வத்சலா அடிபட்ட பாம்பானாள். உள்ளே திமிருகிற குதிரையைக் கால்பக்கம் முள் கம்பியால் குத்தினாள். லகானை இறுக்கப்பிடித்துச் சாட்டையைச் சொடுக்கினாள். உள்ளே கறுப்புக் குதிரை கோபம் கொண்டு விரைந்தது. மேலும் மேலும் சாட்டையடி. பேயாய் பறந்தது.

"யாருடி அது."

"சிநேகிதன்மா."

"சிநேகிதன்னா."

"நம்ம ஜாதிதாம்மா."

"நம்ம ஜாதின்னா..."

"வயலின் வாத்தியார் பையன்."

"எங்க இருக்கான்."

''தெருக்கோடில...''

''வாடகை வீடா.''

''ஆமாம்.''

''அப்ப நம்ம ஜாதியில்லை.''

''அம்மா...''

''ப்ரியா, இப்படிவா. உங்கப்பா அறைஞ்சுட்டா நான் ஓய்ஞ்சுட மாட்டேன். என்னை மாத்திக்க மாட்டேன். நம்ம ஜாதி எதுன்னு தெரியுமா''

''தெரியும், பிராமின்ஸ்.''

''இல்லை; ஏழை ஜாதி. அந்த வயலின் வாத்தியார் ஏழை ஜாதி. இப்படியே காலம் காலமா இருக்க எனக்குப் பிடிக்கலை. உங்கப்பா கொடுக்காததை எனக்கு நீயும் உங்கண்ணாவும் கொடுக்கணும். இந்த வீட்டை விட்டு வேற வீட்டுக்கு மாறணும். பொட்டி வைக்கிற பொட்டிவீடா வாங்கித்தான் ஆகணும். இது என் கனவு. என் லட்சியம். இது நடக்கற வரைக்கும் உனக்கும், உன் அண்ணனுக்கும் கல்யாணம், கார்த்தி, லவ், அது, இது எதுவுமில்லை. ஒழுங்காப் படிச்சி நிறைய சம்பாதி. அப்புறம் எவனை வேணா கல்யாணம் பண்ணிண்டு போ. உங்கண்ணாகிட்டயும் சொல்லிடு. இது செய்து முடிக்கல நீங்க ரெண்டு பேரும்... என் நெஞ்சு வேகாது. இது சத்தியம்.''

பெண் மிரண்டு தரையில் உட்கார்ந்து கொண்டாள். இரண்டு மணி நேரம் சுருண்டு படுத்துக் கொண்டாள்.

எழுந்து முகம் அலம்பினாள்.

''அம்மா, நான் வயலின் வாத்தியார் வீடு வரைக்கும் போயிட்டு வரேன்.''

''எதுக்கு.''

''இனிமே என் கூட வராதே. எனக்கு வேற வேலை இருக்குன்னு அந்தப் பையன்கிட்ட சொல்றதுக்கு.''

''போ, போய் முதல்ல சொல்லிட்டு வா. நான் ராட்சசியாப் படுவேன் இப்ப. பின்னால ஒரு நாள் புரியும்.''

''புரியறதும்மா.''

''என்ன புரியறது.''

பெண் கண்களை மூடிக் கொண்டாள். ''எனக்குப் புரிஞ்சதை உனக்குச் சொல்லமாட்டேன்.''

''வேற யாருக்கச் சொல்வே.''

''என் குழந்தைகளுக்குச் சொல்வேன்.''

பெண் படியிறங்கிப் போனாள்.

வெளியே வில்வ மரம் அசையாது நின்று கொண்டிருந்தது.

**—— முற்றும் ——**

# பாலகுமாரன்

## காற்றுக்கென்ன வேலி

என்றுமில்லாதபடிக்கு
ஆபீஸ் போவது அன்று
சந்தோஷமாக இருந்தது.
ஸ்கூட்டர் ஓட்டுவதிலேயே
ஒரு அதிகமான விரைவும்,
அதே சமயம் ஒரு கவனமும்
தோன்றின. வாகனங்களை
ஓவர்டேக் செய்கிற பொழுது
மனசு முற்றிலும் ஸ்கூட்டர்
ஓட்டுவதில் படிந்து
விரைவும் குறையாமல்,
குழப்பமும் ஏற்படாமல்
கடக்க முடிந்தது.

சில சமயம் இதே விதமான முந்துதல் சரிவரச் செய்யப்படாமல் வயிறு கலங்கடித்ததுண்டு. வசவுகள் வாங்கித் தந்ததுண்டு. இன்று என்னவோ ஓவர்டேக்கிங் சுலபமான கணக்காய், யாரையும் பதட்டப்படுத்தாத தன்மையாய், சந்தோஷமாய் இருந்தது.

இன்னும் மூன்று நிமிடத்தில் ஆபீஸ் போய் விடலாம். இன்னும் இரண்டு மணி நேரத்தில் ஜெனரல் மேனேஜர் உள்ளே கூப்பிடலாம். அவரது கண்ணாடி அறைக்குள் நுழைந்ததும் கை குலுக்கலாம். அமரச் சொல்லலாம்.

"சுந்தரம், இன்றிலிருந்து இந்த கம்பெனியில் உதவி மேனேஜராகப் பதவி உயர்வு பெறுகிறீர்கள். எக்ஸிகியூட்டிவ்ஸ் என்கிற வட்டத்திற்குள் வந்து விடுகிறீர்கள். இது ஆர்டர்" கவர் நீட்டலாம். மறுபடி கை குலுக்கலாம்.

"சுந்தரம், இந்த கம்பெனி உங்களைப் போன்ற இளைஞர்களை உற்சாகப்படுத்தி முழுவதுமாய் அவர்கள் திறனை உபயோகப்படுத்திக் கொள்ள நினைக்கிறது. கம்பெனி நன்றாக இருந்தால் நாமும் நலமாக இருப்போம். நாம் நலமாக இருந்தால் கம்பெனி நன்றாக இருக்கும். பரஸ்பரம் இந்த நன்மைக்காக நீங்கள் இன்னும் கடுமையாக உழைக்க வேண்டியிருக்கும். இந்தப் புதிய பொறுப்பில் பிரச்சினைகள் அதிகம். எந்தப் பிரச்சினையாயினும் என்னிடம் நேரே பேசலாம். எப்போது வேண்டுமானாலும் தொந்தரவு செய்யலாம். ஏனெனில் நாம் வேறு கம்பெனி வேறு அல்ல. இன்னும் மூன்று மாதத்தில் கம்பெனி உங்களுக்கு கார் தரும். உங்கள் வீட்டு டெலிபோன் பில்லை கம்பெனி பார்த்துக் கொள்ளும். உங்கள் குடும்பம் உட்பட மருத்துவச் செலவை கம்பெனி ஏற்கும். குழந்தைகளின் படிப்பை, அதற்கு உண்டான செலவுகளை, கம்பெனி தரும். இரண்டாயிரம் ரூபாய் வரை வீட்டு வாடகையை கம்பெனி கொடுக்கும். சொந்த வீடிருப்பின் பராமரிப்புச் செலவு ஏற்கப்படும். வருடத்திற்கு ஒருமுறை பதினைந்து நாட்கள் ரூபாய் பதினைந்தாயிரத்துடன் கட்டாய லீவு. இந்த காசை வங்கியில் போட்டுவிட்டு வீட்டில் இருக்கக்கூடாது. குடும்பத்துடன் வெளியூர் போயே ஆக வேண்டும். பதிலுக்கு கம்பெனி உங்களிடம் எதிர்பார்ப்பது ஒன்றே ஒன்றுதான். இந்தக் கம்பெனியின் வளர்ச்சியைத் தவிர வேறு எதுவும் உங்கள் சிந்தனையில் இருக்கக்கூடாது என்பதுதான். நாளையில் இருந்து டை அணிந்து கொண்டு வாருங்கள். இது என் தனிப்பட்ட பரிசு" ஒரு டைபின் தரலாம்.

சுந்தரம் வண்டியின் ஓட்டத்தை இன்னும் குறைத்தான். வண்டி ஐம்பத்தைந்தில் இருந்து ஐம்பதுக்கு இறங்கியது. இன்னும் மெதுவாகி நாற்பத்தைந்தில் நின்றது.

ஒருவேளை இந்த சந்தோஷம்தான் வண்டியைத்

திறமையாக ஓட்ட வைத்ததா? இன்றைக்கு புரமோஷன் கிடைக்கப் போகிறது என்பதால்தான் முழுவதுமாய் மனசு வண்டியோட்டுவதில் ஒன்றியதா? வாகனங்களைப் பதட்டமின்றி முந்த மனது முற்றிலும் தயாராயிற்று. வண்டியோட்டுவது போலத்தான் ஒரு கம்பெனியும், அங்குள்ள வேலையும். வண்டி ஓட்டுகிறபொழுது வண்டி ஓட்டுவது தவிர வேறு எந்த சிந்தனையும் இல்லாதிருப்பது போல்தான் இங்கும் இருக்க வேண்டும். வீட்டு சிந்தனை கம்பெனிக்கு வந்தால் மேலும் குழப்பமாகும். கம்பெனி சிந்தனை வீட்டுக்கு வர, வீடு கஷ்டமாகும். தான் வெற்றி பெற்ற காரணமும், இந்த நியதியின் அடைப்படையில்தான். வீடு பற்றி எந்தக் குழப்பமுமின்றி கம்பெனியை நேசித்ததுதான். வீடு குழப்பம் இல்லாமல் இருக்கக் காரணம் கிரிஜா. கிரிஜா குழப்பமே இல்லாமல் இருக்கக் காரணம், கம்பெனி. கம்பெனி தரும் நாலாயிரம்.

"நேத்தைக்கு வழக்கத்தைவிட சீக்கிரமாக கிளம்பிட்டேன். சீக்கிரம் போகணும்னு முன்னேயே சொல்லப்படாதோ, ஹிண்டு பேப்பர் கையில வச்சுண்டு ஏதோ எழுதிட்டிருந்தேளா தொந்தரவு பண்ணக்கூடாதுன்னு நகர்ந்துட்டேன். நீங்க குளிச்சதும் தெரியல, பூஜை பண்ணினதும் தெரியல. நான் வரட்டுமான்னு படி இறங்கிட்டேள். அப்புறம் எப்படி நிறுத்தறது. செக்கில கையெழுத்து வாங்கணும்னு நினைச்சேன். வாங்கல. கீழ் போர்ஷன் மாமிகிட்டே நூறு ரூபா கடன் வாங்கிண்டு நாளைக்கு கொடுத்துடறேன் மாமின்னு சொல்லிட்டு போனேன். எங்க பள்ளிக் கூடத்துல சீட்டு ஆரம்பிக்கறா. தள்ளு சீட்டு, தீபாவளிக்கு முடியும். நான் சேர்ந்துட்டேன். தடக்குன்னு ரெண்டாயிரம் ரூபா தீபாவளிம்போது தேடாத சீட்டுப் பணம் ஆயிரும். நீங்க கொடுக்கற காசும் இருந்தா இன்னும் நல்ல புடவையா எடுத்துக்கலாமோன்னோ."

"அதாவது மூவாயிரம் ரூபா புடவை."

"ஆமா மூவாயிரம். என்ன இப்ப... கல்யாணப் புடவைக்கப்புறம் வேற நல்ல புடவை எனக்கு அமையவே இல்லை. கல்யாணப் புடவை கொஞ்சம் மங்கிடுத்து. இந்த தடவை நல்ல புடவை வாங்கணும்னுதான் சீட்டு சேர்ந்தேன். தப்பா."

"சீட்டு சேர்ந்தது தப்பில்லை. காலங்கார்த்தால கீழே போயி நூறு ரூபாய்க்கு நின்னே பாரு அதுதான் கஷ்டமாயிருக்கு."

"ஐயோ அந்த மாமி ஒண்ணுமே சொல்லல. மொள்ளக்குடு. அவசரமே இல்லேன்னுட்டா. டக்குன்னு எடுத்து குடுத்துட்டா. எனக்கும் கடன் வாங்கறமே அப்படின்னுதான் இருந்தது. என்ன பண்றது? நீங்க சீக்கிரம்

போயிட்டேளே."

கீழ் வீட்டு மாமி டக்கென்று காசு கொடுக்க கம்பெனி காரணம். கம்பெனியின் பவிசு காரணம். இந்த உத்தியோகம் காரணம். அவள் பெண்ணுக்கு கம்பெனி ஜெனரல் மேனேஜர் சொல்லி குயின்மேரீஸில் பி.எஸ்ஸி நியூட்ரிஷன் கிடைத்தது.

"ஒரே ஒரு பொய் சொல்லணும் மாமி. உங்க பொண்ணை எங்க அக்கா பொண்ணுன்னு சொல்லியிருக்கேன். நீங்களும் அந்த மாதிரியே சொல்லணும்."

"இதுல பொய் என்ன? நீங்க எனக்கு உடன் பொறந்தான்தான். இப்ப என்ன குடித்தனக்காரா மாதிரியா பழகறோம். நியூட்ரிஷனுக்கு நல்ல ஸ்கோப் இருக்குங்கறா. இது கிடைச்சா எந்த ஜென்மத்துக்கும் மறக்க மாட்டோம்."

இரட்டை பின்னலும், கறுப்பு தாவணியும், மஞ்சள் சோளியும், மஞ்சள் பாவாடையுமாய் மாமியின் பெண் ஸ்கூட்டருக்குப் பின்னால் அமர, ஜெனரல் மேனேஜர் வீட்டுக்குப் போனான். பைஜாமாவும், தொள தொள சட்டையுமாய் அமர்ந்திருந்த ஜி.எம்.மோடு பேசினான். ஜி.எம். டெலிபோனில் இரண்டு நிமிடத்தில் சீட்டுக்கு ஏற்பாடு பண்ணி விட்டார். மீதி அரைமணி கம்பெனி பற்றிப் பேசிக் கொண்டிருந்தார். இது என்ன. அது என்ன என்று தகவல் கேட்டார். வளைகுடாப் போர் வரும் என்று ஐரோப்பிய விஞ்ஞானி சொல்லியிருந்த அறிக்கையை அவன் சுட்டிக்காட்டினான். அப்படி வந்தால் கம்பெனி நிலைமை என்ன ஆகும் என்று பட்டியல் போட்டான்.

சுந்தரத்தின் கம்பெனி, டயர்கள் உற்பத்தி செய்யும் கம்பெனி. டயருக்கு, ரப்பர் அடிப்படைப் பொருள். ரப்பர் லோக்கல் விஷயம். அதை உருக்க எரிபொருள் மிக அவசியம். எரிபொருளில் முக்கியமானது டீசல். ஃபர்னஸ் ஆயில். டயரின் இன்னொரு விஷயம் நைலான் நூல். நைலான் பிளாஸ்டிக்கின் இன்னொரு வடிவம். பிளாஸ்டிக் பூமியிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயின் ஒரு பிரிவு. வளைகுடாப் போர் வர சகலமும் விலை ஏறும். கம்பெனியின் ஒருநாள் எண்ணெய் செலவு, நைலான் கணக்குக் காட்டினான். இப்போது இருப்பது போல நான்கு மடங்கு ஸ்டாக் செய்தால் விலை உயர்வு வர, டயர் விலை ஏற லாபமென்ன. கணக்குச் சொன்னான். நாலு மடங்கு முதலீட்டின் வட்டி கழித்தான். நிகர லாபம் காட்டினான். நிகர லாபமே பல கோடிகளில் இருந்தது.

"சரி, சுந்தரம். வளைகுடாப் போர் வரவில்லையெனில்..."

"சார் கேலி செய்யாமலிருந்தால் இன்னொரு தகவலும் சொல்கிறேன். இந்த பூமியின் ஜாதகப்படி இப்பொழுது சனி ஆறில் செவ்வாய் பத்தில். யுத்தம் வந்தே தீரும். மிக மோசமான யுத்தமாக அது இருக்கும்."

ஜி.எம்.சிரித்தார்.

"கம்பெனி மீது உனக்குள்ள அக்கறையை நான் பாராட்டுகிறேன். நாலு மடங்கு ஸ்டாக் வைப்பது இயலாத காரியம். இரண்டு மடங்கு வைக்கலாம். எனக்கும் வளைகுடாப் போர் வருமென்று தோன்றுகிறது. அதற்கு காரணம் சனியோ, செவ்வாயோ என்று நான் நினைக்கவில்லை. சதாம்உசேன் பேச்சு சரியாக இல்லை, நீ சொன்னது போல அந்த விஞ்ஞானி பெரிய ஆள். அவர் கணிப்பு தவறியதில்லை. நாளை காலை ஒரு தனி மீட்டிங் ஏற்பாடு செய்வோம். நீயும் வா."

"சார் இந்த காலேஜ் சீட்.."

"இந்த அழகி உன்னோடு வந்தாள் அல்லவா. சுந்தரம் கேட்டு நான் மறுத்ததுண்டா. அவளுக்கு சீட் கிடைத்து விட்டதென்றே நினைத்துக் கொள்ளலாம்" விடை கொடுத்தார்.

மூன்றாம் நாள் அவளுக்கு சீட் கிடைத்து விட்டது. சுந்தரம் உனக்கு என்ன வேண்டும் என்று பிரின்சிபால் கேட்டாராம். அந்த அழகி கொஞ்சம் முழித்துவிட்டு, சொந்த மாமா என்று சொல்லியிருக்கிறது. அட்மிஷன் கார்டோடு வீட்டிற்கு வந்தது. கீழ் வீட்டு மாமி பூவாரித் தலையில் கொட்டவில்லை என்பதுதான் குறை.

"அடியே கிரிஜா, எம் பொண்ணுக்கு நியூட்ரிஷன் கிடைச்சுடுத்து."

அவளின் மொத்த வீடும் தபதபவென்று வீட்டிற்குள் நுழைந்தது. சுந்தரத்தின் குழந்தையைக் கொஞ்சியது. மனைவியைப் பாராட்டியது. சட்டி நிறைய அல்வாக் கிளறி பரிசளித்தது. காலேஜுக்கு முதல் நாள் போகும்போது அந்த அழகி சுந்தரத்தைத் தேடினாளாம். சுந்தரம் ஆபீஸ் போய்விட, கிரிஜாவை நமஸ்காரம் பண்ணி விட்டுப் போனாளாம். என்ன மரியாதை, எவ்வளவு அன்பு. கிரிஜா கீழ் வீட்டை வியந்தாள்.

இது கம்பெனி கொடுத்த மரியாதை. உத்தியோகம் கொடுத்த மதிப்பு. இந்த உத்தியோகம் இன்னும் உயரப் போகிறது. உயரதிகாரி வட்டத்தில் சுந்தரம் சேரப் போகிறான். ஆபீஸ் பியட் கார் தரும். கம்பெனி பெயர் பொறித்த 'டைபின்' தரும். வாடகை உயர்வு வசதிகள் தரும். டெலிபோன் பில் தரும். குடும்பத்தோடு வருஷத்துக்கு ஒரு முறை ஊர் சுற்ற காசு தரும். எல்லாம் கொடுத்து விட்டு எதிர்பார்க்கும். நாயாய் பேயாய் உழைக்கச் சொல்லும்.

அம்பத்தூர் நெருங்கி கம்பெனி வாசல் தெரிய சுந்தரம் வண்டியின் வேகத்தை முப்பதுக்குக் குறைத்தான். அவன் நுழைய செக்யூரிட்டி கதவை வேகமாகத் திறந்தார். பெரிய கம்பிக் கதவு ஆடிக் கொண்டு அவனை நோக்கி வந்தது.

"சார கொஞ்சம் இருங்க. ப்ளீஸ..." செக்யூரிட்டி கத்தினார்.

உள்ளேயிருந்து வெளியே வரும் டீசல் லாரிக்கு கதவு திறப்பது புரிந்தது. ஆடிக் கொண்டு வந்த கம்பிக் கதவு ஸ்கூட்டரின் முன்பக்கம் நச்சென்று இடித்தது. இரும்புக் கதவின் நுனி பட்டு ஸ்கூட்டரின் முன் பக்கம் சொட்டையாயிற்று.

"என்னய்யா இது" சுந்தரம் கத்தினான்.

"ஸாரி சார். நான் கவனிக்கலே" செக்யூரிட்டி பதில் சொன்னார்.

சுந்தரத்துக்கு ஸ்கூட்டர் தாக்கப்பட்டது பிடிக்கவில்லை. மனதின் ஓரம் ஒரு வளைவு விழுந்தது. பயம் வந்தது. சுந்தரம் உள்ளே போனான்.

## 2

கிரிஜா அன்றைக்கும் பள்ளிக்கூடத்திற்கு லேட். வழக்கத்தை விட அதிக தாமதம். பஸ்ஸிற்கு நின்று பார்த்து அது வராத படபடப்பில் ஆட்டோவைத் தேடி, ஐந்து ரூபாய் அநியாயமாய் ஆட்டோவுக்குக் கொடுத்தும் பதினைந்து நிமிட தாமதம். பிரேயர் முடிந்து குழந்தைகள் வகுப்புகளுக்குப் போய் விட்டார்கள். அங்கங்கே அட்டெண்டன்ஸ் எடுக்கும் சத்தம் வந்து கொண்டிருந்தது. ஆனால் இன்னும் டீச்சர்ஸ் ரெஜிஸ்டர் எடுக்கப்படாமல் இருந்தது. கையெழுத்துப் போட்டுவிட்டு, கிளாசிற்கு ஓடி விடலாம் என்கிறபோது தலைமை ஆசிரியை கூப்பிடுவதாக பியூன் சொன்னான்.

"பஸ் நிறுத்திட்டான் மேடம். சி.எம். க்ராஸ் பண்ணினாங்க" வழக்கமான பொய் சொல்லத் தயாரானாள். தள்ளு கதவைத் தாண்டி உள்ளே நுழைந்தாள். தலைமைக் கிழவி தலை நிமிர்ந்தது.

"கிரிஜா, உன்னதான் பார்க்கணும்னு நினைச்சுக்கிட்டு இருந்தேன். எனக்கு ரெண்டு கார் டயர் வேணுமே. அம்பாசிடர் கார். உம் புருஷன் செகண்ட்ஸ் வாங்கித் தராறாமே, சீப்பா. பி.டி. இன்ஸ்ட்ரக்டர் உஷா சொன்னா. அவ மொபட்டுக்கு படு சீப்பா வாங்கிக் கொடுத்தியாமே. கார் டயர் கிடைக்குமா சீப்பா."

"கிடைக்கும் மேடம். எனக்கு சைஸ் எழுதிக் கொடுங்க."

"காசு."

"அப்புறம் வாங்கிக்கறேன்."

"உடனே வேணும் கிரிஜா. ரெண்டு ப்ரெண்ட் டயரும் ஃபால்ட். நேத்து பஞ்சராகி ரொம்ப அவஸ்தை பட்டுட்டேன்."

"இப்பவே ஃபோன் பண்ணி சொல்லிட்டா நாளைக்கு கிடைச்சுடும்."

"பண்ணு" தலைமை ஆசிரியை போன் நகர்த்தினாள். கிரிஜா நம்பர் சுழற்றினாள்.

"சுந்தரம் இருக்காரா? நான் அவர் மிஸஸ் பேசறேன். கொஞ்சம் அர்ஜெண்டா பேசணும்."

ஹெச்.எம். எதிர் சேரில் உட்கார்ந்து கொண்டார். நல்லவேளை தாமதமாய் வந்தது கிழவிக்குத் தெரியவில்லை. ஒருவேளை தெரிந்தும் தன் காரியத்திற்காக சும்மா இருக்கிறதோ என்னவோ.

"சுந்தரம் வேணும். நான் அவர் மிஸஸ் கிரிஜா பேசறேன்". மறுபடியும் சொன்னாள்.

"என்னம்மா."

எதிர்பக்கத்தில் சுந்தரத்தின் உற்சாகமான குரல் கேட்டது..

"எங்க ஹெச்.எம்.முக்கு ரெண்டு பழைய டயர் வேணுமாம்."

"ஏய் பழசில்ல, செகண்ட்ஸ் டயர் வேணும்." தலைமைக் கிழவி கத்தியது.

"எங்க கம்பெனில பழைய டயர் பண்றதில்லைம்மா" சுந்தரம் எதிர் ஃபோனில் கெக்கலித்தான்.

"ஸாரிப்பா. செகண்ட்ஸ், டயர்."

"என்ன டயர் சொல்லு."

"அதுதான் செகண்ஸ்ங்கறேனே."

"செகண்ட்ஸ்ல என்ன டயர். லாரியா, டிராக்டரா, புல்டோஸரா, ஏரோபிளேனா."

"அம்பாசிடர் கார்."

"அம்பாசிடர் கார்ல என்ன டயர் வொய்ட் வாலா, பிளாக் வாலா, சிக்ஸ் ப்ளையா, எய்ட்ப்ளையா, ரேடியலா, நான் ரேடியலா, நைலானா, ஆர்டினரியா... ஏகப்பட்ட வெரைட்டி இருக்கே."

கிரிஜா குழம்பினாள். "மேடம் நீங்க பேசுங்க." போனை தலைமைக் கிழவியிடம் கொடுத்தாள்.

"மிஸ்டர் சுந்தரம்" கிழவி கொஞ்சியது. தன் தேவையைச் சொல்லியது. அங்கே சுந்தரம் சட்டென்று உஷாராகி, தலைமைக் கிழவியிடம் மிக இதமாகப் பேசி, 'ரெண்டு போதுமா நாலா வாங்கிக்கங்களேன் லாபமாச்சே' என்று கேட்டிருக்க வேண்டும். கிழவிடயர் பஞ்ச்சரானது

சொன்னவுடன் உடனே உதவி செய்வதாய்ச் சொல்லியிருக்க வேண்டும். அந்தப் பள்ளிக்கூடத்திலிலேயே ஐந்தாவது படிக்கும் தன் பையனைப் பற்றி விசாரித்திருக்க வேண்டும். கிழவி பையனைப் பாராட்டியது. அவன் படிப்புக்கு தான் பொறுப்பேற்றுக் கொள்வதாகச் சொல்லியது. "கிரிஜா உன் கூட பேசணுங்கறாரு" கிழவி ஃபோன் கொடுத்தது.

"என்ன. உங்க கிழவிய பற்றி ஆவூன்னு பயமுறுத்தினே. ரொம்ப கொஞ்சிக் கொஞ்சி பேசறா. நேரா பார்த்தா கட்டி முத்தம் கொடுத்துடுவா போலிருக்கே."

கிரிஜா அவன் பேச்சைப் புறக்கணித்தாள்.

"சாயங்காலம் சீக்கிரம் வருவேளா?" சம்பந்தமில்லாமல் கேட்டாள்.

"எட்டு மணிக்கு கம்பெனிக்குள்ள இருக்கணும். எத்தனை மணிக்கு வெளில வர்றோமோ அது கடவுளுக்குத்தான் தெரியும். நான் டயர் அனுப்பறேன்" சுந்தரம் ஃபோன் வைத்தான்.

பின்னால் ஹைஸ்கூல் டீச்சர் கெமிஸ்ட்ரி வசந்தா தாமதமாகி, கை பிசைந்து தலைமைக் கிழவியிடம் எதிரே நிற்பது தெரிந்தது.

"டோண்ட் கிவ் மீ த சேம் ரீஸன் எவ்ரி டே' தலைமைக் கிழவி கத்தினாள். இத்தனை பேரு ஸ்கூலுக்கு கரெக்ட்டா வரலை. உன்னை மட்டும்தான் சி.எம். வழி மறிச்சாங்களா?சி.எம். இன்னிக்கு ஊர்லேயே இல்ல. ஏம்மா பொய் சொல்றீங்க."

"யாரோ சிகப்பு லைட் எரியற கார்ல போனாங்க மேடம். அது சி.எம்.மான்னு தெரியாது. பத்து நிமிஷம் ட்ராஃபிக் ஜாமாயிடுச்சு."

"அந்த பத்து நிமிஷம் கழிச்சாலும் நீ லேட்தான். திஸ் இஸ் த ஃபர்ஸ்ட் வார்னிங். மறுபடியும் லேட்டா வந்தா கெட்ட கோபம் வரும். டென்த் ஸ்டாண்டர்ஸ் ஃபர்ஸ்ட் பீரியட் கெமிஸ்ட்ரி. இருபது நிமிஷம் போச்சு. இன்னும் முப்பது நிமிஷத்துல என்ன சொல்லிக் கொடுப்பே. போன தடவை டென்த் ரிசல்ட் போனதே கெமிஸ்ட்ரியாலதான். உன்னாலதான். இஷ்டமில்லேன்னா விட்டுட்டுப் போ வசந்தா."

கிரிஜா விடை பெற்று வெளியே வந்தாள். உள்ளே தொடர்ந்து உரத்த குரல் கேட்டது. நின்று கவனித்தாள்.

நல்லவேளை. தலைமைக் கிழவி இன்று திட்டவில்லை. தன் திட்டையும் சேர்த்து வசந்தா வாங்கிக் கொண்டாள். வசந்தா பாவம். அவளுக்கு புருஷன் சரியில்லை. புருஷனும் சரியில்லாமல் வேலைக்கும் போக வேண்டிய நிலை

பெரிய வேதனை.

புருஷனே இல்லாமலிருந்தால், வேலைக்குப் போகலாம். புருஷன் நல்லவனாக இருந்தாலும் வேலைக்குப் போகலாம். புருஷன் நல்லவனாக இருந்து கை நிறைய சம்பாதிப்பவனாக இருந்தால் இன்னும் சந்தோஷம். இப்படி இருப்பதில் பெண்ணுக்கு அசாத்திய மதிப்பு வந்து விடும். சுந்தரம் புருஷனாக கிடைத்தது பெரும் பாக்கியம்.

பெண் பார்க்க வரும்போதே அது தெரிந்து போயிற்று. அவன் துடிப்பான புருஷன். வேறு மாதிரியான ஆள் என்பது தெரிந்து போயிற்று.

வந்தவர்களுக்கு வெள்ளி டம்ளரில் காபி கொடுக்க வேண்டும் என்று அம்மாவுக்கு ஆசை. அக்கம் பக்கம் கடன் வாங்கி, இன்னும் ஏழு வெள்ளி டம்ளர் சம்பாதித்து கொதிக்கக் கொடுக்க வெள்ளி டம்ளரில் காபி கொடுக்க, சுந்தரம் வெள்ளி டம்ளரைக் கீழே வைத்து விட்டான்.

"காபி பிடிக்காதா." அம்மா கொஞ்சலாய்க் கேட்டாள்.

"ரொம்ப பிடிக்கும். வெள்ளி டம்ளரத்தான் கையில பிடிக்க முடியல" சுந்தரம் பதில் சொன்னான். வீடு சிரித்தது.

கண்ணாடி டம்ளர் கேட்டு வாங்கி காபியை அதில் ஊற்றிக் குடித்தான். பாட்டு கேட்டு பஜ்ஜி தின்று கிளம்புகிற நேரம் நாற்காலி அடியில், பீரோ ஓரம், ஜன்னல் விளிம்பில் வைத்த எல்லா வெள்ளி டம்ளரையும் சுட்டிக்காட்டி எடுத்துப் போகச் சொன்னான்.

"ஒன்பது டம்ளர் ஹாலுக்கு கொண்டு வந்தேள். ஒன்பது இருக்கா பார்த்துக்கோங்கோ" வலியுறுத்தினான்.

"அது கிடக்கு நாங்க பார்த்துக்கறோம்" அப்பா அலட்சியப்படுத்தினார். பொண்ணு பிடிச்சிருக்கா சொல்லுங்கோ" அவசரப்படுத்தினார்.

"சார் பொண்ணு பிடிச்சுருக்கு. வெள்ளி டம்ளர் பிடிக்கல. அங்கே இங்கே கடன் வாங்கி பெண் பார்க்க வரம்னு ஏற்பாடு பண்ணியிருக்கேள். திருப்பி ஜாக்கிரதையா தர வேண்டாமா."

"தரணும்... தரணும்..." அப்பா முகம் மாறினார்.

"எதுக்கு சொல்றேன்னா போன தடவை ஒரு இடத்தில் பொண்ணு பார்த்தோம். எனக்கு பிடிக்கலைன்னு அங்கேயே சொல்லிட்டேன். காரணம் என்னைவிட அவ உயரம். நிச்சயமா அந்தப் பொண்ணுக்கும் என்னைப் பிடிச்சிருக்காது. வீட்டுக்கு வந்ததும் ஒரு ஃபோன். ஒரு வெள்ளி டம்ளர் குறையுது. தவறி உங்க பையில வந்துட்டுத்தான்னு பாருங்கோன்னு சொல்றா. ஆமா இருக்குன்னு சொல்லி ஒரு புது வெள்ளி டம்ளர் வாங்கிக் கொடுத்துடலாம்னு நினைச்சேன்" வீடு மறுபடியும் மெலிதாய் சிரித்தது.

"எதுக்கு இந்த வேஷம். நாம மிடில் க்ளாஸ். ஒன்பது வெள்ளி டம்ளர் நம்ம வீட்ல எப்படி இருக்கும். கடன் வாங்கி அந்தஸ்து காட்டணும்னு என்ன அவசியம். எங்க வீட்ல ஒரு வெள்ளி டம்ளர்தான் சார் இருக்கு. நாங்க அதை எடுக்கறதே இல்லை. கிரிஜா ஏதாவது வெள்ளில கொண்டு வந்தா அதுவும் உள்ளதான் இருக்கும். உபயோகப்படுத்த மாட்டோம்."

வீடு சந்தோஷமாய் வாய் விட்டு சிரித்தது. இந்தக் கதையை உறவினர்களிடம் எல்லாம் சொல்லி சந்தோஷப்பட்டது. அப்படிச் சொன்னதன் விளைவு அற்புதமாக இருந்தது. சிறிதும், பெரியதுமாய் பதினோரு 'வெள்ளி டம்ளர்கள் உறவினர்களால், நண்பர்களால் ஓதியிடப்பட்டது.

"நான் அன்னைக்கு அப்படி டயலாக் அடிச்சதே இப்படியொரு ரிசல்ட் வரணும்னுதான். வந்துட்டுது. எல்லா டம்ளர்களையும் மடியில கட்டிக்கோ" அக்னி முன்பு அமர்ந்திருந்த சுந்தரம் காதோரம் கிரிஜாவிடம் பேசினான். கிரிஜா 'சீய்' என்று வெட்கப்பட்டாள். முதலிரவில் வெள்ளிச் சொம்பும், அதில் பாலும், வெள்ளி டபரா செட்டும் கொடுத்து அனுப்பினார்கள்.

"பால் சூடாதான் இருக்கு. ஆனா ஆத்தி குடிக்க வெள்ளி டபரா செட் கொடுத்திருக்கோம். மாப்ளே... சந்தோஷமா சாப்பிடுங்கோ" சொந்தக்காரர்கள் கெக்கலித்தார்கள்.

"ஒருவேளை ஆறி அவலாச் சாப்பிட்டுதான் பழக்கமோ என்னவோ, மாப்பிள்ளை மூஞ்சியில தூக்கம் சொக்கறதே" இன்னொரு பெண் கூச்சலிட்டாள்.

"கிரிஜாவ பொண்ணு பார்த்துட்டு வந்து கொதிக்க கொதிக்க சாப்பிட கத்துண்டுட்டேன். யாரும் கவலைப்பட வேண்டாம். கிரிஜா, சீக்கிரம் கதவை சாத்து" சுந்தரம் கண் சிமிட்டினான். கூட்டம் 'ஹோ'வென்று சிரித்தது. சுந்தரம் வெறும் சிரிப்பான மனுஷன் மட்டும் அல்ல. நிறைய சிந்திக்கிறவன் என்பது மறுநாள் புரிந்தது.

ஓதியிட்ட எல்லாப் பொருட்களையும் கணக்குப் பார்த்து எடுத்துக் கொள்ளும் பொழுது சுந்தரம் இரண்டு வெள்ளி டம்ளர்களை எடுத்து கிரிஜாவின் அம்மாவிடம் நீட்டினான்.

"ஐயோ எனக்கென்னத்துக்கு. இது உங்க பொருள்" அம்மா வெட்கப்பட்டாள்.

"உங்களுக்கு இன்னொரு பொண்ணு கல்யாணத்துக்கு இருக்காளே. அவளை பெண் பார்க்க நாலு பேர் வருவாளே. பக்கத்து வீட்ல போய் மறுபடி வெள்ளி டம்ளர் கடன் வாங்கணுமா. இது உங்ககிட்டேயே இருக்கட்டும். இன்னொரு பொண்ணைக் கேட்டு மனுஷா வரப்போ எங்களுக்கு சொல்லி அனுப்புங்கோ. நானும் கிரிஜாவும் மீதி வெள்ளி டம்ளர்களோட வரோம்" அம்மா விழி விரிய சுந்தரத்தைப் பார்த்து இரண்டு

வெள்ளி டம்ளர்களையும் வாங்கிக் கொண்டாள். அன்று மாலையே டம்ளர்களில் கி.சு. கி.சு. என்று பெயர் அடித்து விட்டாள். என்றைக்கு இருந்தாலும் அது கிரிஜாவின் பொருளாம். வேறு யாருக்கும் அதைத் தரப் போவதில்லையாம். அன்று ஆரம்பித்த மாப்பிள்ளை மாமியார் ஒட்டுதல் பல்கிப் பெருகியது. சங்கரனை பிள்ளைப் பெற வீட்டுக்கு வந்தபோது சுந்தரம் அடிக்கடி வந்து பார்ப்பான். அம்மா ஓடி ஓடி உபசரிப்பாள். அம்மாவுக்கு ஹேப்பி பர்த்டே சொன்ன முதல் ஆள் சுந்தரமாகத்தான் இருப்பான். புருஷனல்லாது அம்மா புடவை வாங்கிக் கொண்டது சுந்தரத்திடம்தான்.

சுந்தரம் இரக்கமுள்ளவன். இனிமையானவன்.

"நூத்தி அறுபது ரூபா புடவை உங்கம்மாவுக்கு கொடுத்து நான் குறைஞ்சிட மாட்டேன் கிரிஜா. தானம் பண்றது ஒரு சந்தோஷம். மனசு ஆரோக்கியம். நாலு பேருக்கு கொடுக்கறதுக்காகவே சம்பாதிக்கணும்னு எனக்கு சின்ன வயசிலேர்ந்து ஒரு எண்ணம். ஏன் தெரியுமா. நான் நாலணா காசில்லாம பள்ளிக்கூடம் போயிருக்கேன். நாற்பத்தி எட்டு ரூபா பீஸ் கட்ட பணமில்லாம அவஸ்தை பட்டிருக்கேன். நல்ல சட்டை இல்லைன்னு அழுதிருக்கேன். தீபாவளி அன்னைக்கு கிழிசல் பனியனோட நின்னுருக்கேன். காசு முக்கியமில்லை கிரிஜா. சந்தோஷம் முக்கியம். அந்த சந்தோஷத்தை காசு தருமானால், அப்பதான் காசும் முக்கியம்." சுந்தரம் ஊதாரியில்லை. உபகாரி. வீட்டில் பெரிய சேமிப்பில்லை. ஆனால் சந்தோஷமிருந்தது. சொந்த வீடோ, நிலபுலன்களோ இல்லை. ஆனால் அமைதியும், அன்பும் நிறைந்திருந்தன.

இன்று பள்ளிக்கூடத்திற்கு லேட்டாக வந்ததற்கு அந்த சந்தோஷம் காரணம்.

"நாளைலேர்ந்து நான் அசிஸ்டெண்ட் மேனேஜர். நான் சொல்றது காதுல விழறதா."

"ம்... விழறது."

"நாலு மாசத்துல கார் வந்துரும்."

"வரட்டும்."

"காஷ்மீர்லேர்ந்து கன்னியாகுமரி வரைக்கும் எங்க வேணாலும் போகலாம் கம்பெனி செலவில."

"காஷ்மீர் போகலாம்."

"ஏன் கன்னியாகுமரி பார்த்துட்டியா."

"பார்க்கலை. அதும் பார்க்கணும்."

"அசிஸ்டெண்ட் மேனேஜர்னா கொஞ்சம் பார்ட்டிக்குப் போக வேண்டியிருக்கும். பார்ட்டிக்குப் போனா நான் கொஞ்சம் குடிக்க வேண்டியிருக்கும்."

"ஏய்" அவள் எழுந்து உட்கார்ந்தாள். "என்ன ஆனாலும்

